ஸ்ரீ:

# மாறனகப்பொருளும்

# திருப்பதிக்கோவையும்.



இவை,

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

"செந்தமிழ்" உதவிப்பத்திராசிரியர்

## திரு. கி. இராமாநுஜையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றன.




செந்தமிழ்ப் பிரசுரம்—௫௫.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

1932.

ஸ்ரீ:

மாறனகப்பொருளும்

# திருப்பதிக்கோவையும்.

இவை,

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

"செந்தமிழ்" உதவிப்பத்திராசிரியர்

திரு. கி. இராமாநுஜையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றன.






செந்தமிழ்ப் பிரசுரம்—௫௫.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை,

மதுரை.

1932.

ஸ்ரீ:

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

பக்கம்.

---

ஸ்ரீ:

# முகவுரை.



மாறன் என்பது, பொருநைக்கரையில் விளங்குந் திருக் குருகூரில் வைணவவேளாளகுலதிலகரான காரியார் என்பார்க்கு அவர்மனைவியார் உடையநங்கையார்திருவயிற்றில் உலகுய்ய அவதரித்தவரும், திருவாய்மொழி முதலிய திராவிடவேதங்களை அருளிச்செய்தவரும், மற்றெல்லா ஆழ்வார்களையும் ஞானத்தால் அவயவபூதராகவுடையவருமான சடகோபர்க்குரிய திருநாமம். இவர் பிறந்தபொழுதே உலகியலின் மாறுபட்டுநின்றமையால் மாறன் என்று பெயர்வழங்கப்பெற்றனர். இவர்க்கு மகிழ்மாறன், காரிமாறன், சண்பகமாறன், பராங்குசன், நாவீறன், நாவீறுடையபிரான், குருகைப்பிரான், குருகூரன், பாவலர் தம்பிரான் என்ற திருநாமங்களும் உண்டு.

அகப்பொருள் என்பது; அமிழ்தினுமினிய தமிழ்மொழியி னிலக்கணமைந்திற் பொருளின்கூறுபாடிரண்டனுள் ஒன்று. அது நுவல்பொருள்பற்றிவந்த பெயராய் அதனைத் தொகை வகை விரியாற் கூறும் நூலை உணர்த்தும். அகமாவது:—ஒத்த அன்பினரான தலைவனும் தலைவியும் கந்தருவமுறையால் தம்முட் கூடியொழுகும் ஒழுக்கமாம். இவ்வொழுக்கம் பிறரறியாவாறு அகத்தே மறைத்து வைத்துக்கொள்ளத்தக்கது, மறைத்துரைக்கத்தக்கது என்பது தோன்ற இதனை அகம் என்று காரணக்குறியால் முந்தையோர் வழங்கி வந்தனர்போலும். புலநெறிவழக்கிற் கூறப்படும் கோவைத்துறைப் பாடல்களில் இவ்வொழுக்கம், புறத்தார்க்குப் புலனாகுமாறு கிளவித் தலைவன் தலைவியரியற்பெயரொடுசார்த்திக்கூறப்படாமல் புலப்படாவாறு வெற்புண் கொடிச்சி முதலிய திணைப்பெயர்களொடுசார்த்தி மறைத்துக் கூறப்படுதலும் இதனை வலியுறுத்தும்.

திருப்பதி என்பதனுள் பதி—தலம்; இங்கே அது அஃறிணையியற் பெயராய்த் திருமால் ஆன்மகோடிகள் உய்யுமாறு அர்ச்சா ரூபியாய்க் கோயில்கொண்டுவிளங்கும் அரங்கம் முதலிய தலங்களைக் குறிக்கும்,

திரு என்னும் அடைமொழி ஏனைத்தலங்களினும் இவற்றுக்குள்ள சிறப்பினை யுணர்த்திநின்றது.

கோவை என்பது கோத்தல்—(ஒழுங்குபடத்)தொடுத்தல் என்று பொருள்படும். அஃது ஈண்டு அவ்வாறு முறைப்படத் தொடுக்கப்பட்ட அகப்பொருட்டுறைச் செய்யுட்களையுடையதொரு தமிழ்ப் பிரபந்தத்தை யுணர்த்தும். இதன் இலக்கண விரிவெல்லாம்,

"கோவை யென்பது கூறுங் காலை
மேவிய களவு கற்பெனுங் கிளவி
யைந்திணை திரியா வகப்பொரு டழீஇ
யூந்திய கலித்துறை நானூ றென்ப"

"களவினுங் கற்பினுங் கிளவி வகையாற்
றிணைநிலை திரியாச் செம்மைத் தாகி
நாட்டிய கலித்துறை நானூ றுரைப்பது
கோட்ட மில்லாக் கோவை யாகும்"

"ஐந்திணை தழுவிய வகநிலைக் கோவை
தந்தநா னூறுந் தாங்கலித் துறையே"

எனவரும் பன்னிருபாட்டியற் சூத்திரங்களானும்,

"முதற்பொருள் கருப்பொரு ளுரிப்பொருண் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ றுக
வாறிரண் டுறுப்பு மூறின்றி விளங்கக்
கூறுவ தகப்பொருட் கோவை யாகும்"

எனவரும் இலக்கணவிளக்கப்பாட்டியற் சூத்திரத்தாலும் விளங்கும்.

இனி, மாறனகப்பொருள் என்பது தொல்காப்பியமுதலியவற்றுள், பல்வேறியல்களில் விரிந்து பரந்துகிடந்த அகப்பொருளிலக்கணங்களை யெல்லாம் முறைப்படத் தொகுத்து வகுத்தும், புதியனவாக வேண்டு வனகூட்டி விசித்தும், அகத்திணையியல் களவியல் வரைவியல் கற்பியல் ஒழிபியல் எனும் ஐந்தியல்களுடன் வேதந் தமிழ்செய்த மாறன் திருநாமத்தால் விளங்குமா றியற்றப்பட்டதொருநூலாம். இத னியல்வகையும் சூத்திரத் தொகையும், தொடக்கமும் முடிவும்,

*"மன்னு மகத்திணையே மாண்பார் களவியலே
துன்னு வரைவியலே தூத்தொடியே—பின்னமறக்
கூற றருகற்பே கோதீ ரொழிபியலே
மாற னகப்பொருளின் வைப்பு"

*"ஐந்திணைசேர் மாற னகப்பொருளிற் சேருமிய
லைந்தாநூற் பாவெண் ணடைவாகப்—பைந்தொடியே
மூந்நூற் றறுபத்து மூன்று முதலிறுதி
யுந்துவட வோர்கடனே யோர்"

என வரும் வெண்பாக்களால் விளங்கும்.

இதனை யியற்றினர், பொருநைக்கரையிற் றிகழூந் திருக்குருகூரில் வேளாளகுலத்தினரும் சடகோபருடைய ஆஸ்தானகவிராயர்வழியினருமாகிய திருக்குருகைப்பெருமாள்கவிராயருக்குப் புத்திரராய் இற்றைக்குச் சற்றேறத்தாழ நானூறு வருடங்கட்குமுன் சடையன் என்னும் இயற்பெயருடன் உதித்துத் தம் குடிக்குரிய செந்தமிழ்க் கல்வியுடன் செய்யுளியற்றுமாற்றலும் பெற்றுத் திருக்குருகூர் எம்பெருமானர்ஸந்நிதி ஜீயர்பரம்பரையில் திருப்பதி ஸ்ரீநிவாஸஜீயர் ஸ்வாமியிடம் ரஹஸ்யாதிகளும் பகவத்விஷய முதலியனவுங் கேட்டறிந்து பொருட்டொடர் நவம்புணர் புலமையிற் சிறந்து தம் குடிப்பெயர்க் கியையச் சடகோபர்விஷயமாகவும், அவரவதரித்த திருக்குருகூர் விஷயமாகவும் மாறனலங்காரம், குருகாமான்மியம் முதலிய அரும் பெருநூல்களை யியற்றிய திருக்குருகைப்பெருமாள்கவிராயராவர்.

இவருக்கும் இவர்தந்தைக்கும் திருக்குருகைப்பெருமாள்கவிராய ரென்ற ஒரு பெயரே வழங்கக்காண்டலானும், இவரியற்பெயர் சடையன் என்று பின்வரும் பாடல்களால் விளங்குதலானும், திருக்குருகைப் பெருமாள் என்பது சடகோபர் திருநாமமாகக் காணப்படுதலானும், திருக்குருகைப்பெருமாள்கவிராயர் என்பது சடகோபருடைய ஆஸ்தான கவிராயராய் வழிவழி சிறந்துவிளங்கிய ஒருமரபினர்க்கு வழங்கிவந்த குடிப்பெயரென் றறியக்கிடக்கின்றது.

---

* இச்செய்யுள்களும், பின்வரும் 'அடைவாகு'மென்னு முதற்குறிப்புள்ள செய்யுளும், திருப்பதிக்கோவையில் விடுபட்ட 369ம் செய்யுளும், இலக்கண விளக்கம் வைத்தியநாததேசிகர் பரம்பரைத் திருவாளர் சோமசுந்தரதேசிகரவர்களால் அவர் நண்பரொருவர்பிரதியிலிருந்தெடுத்தெழுதியனுப்பப்பட்டன.

இவர் மேற்கூறிய ஸ்ரீநிவாஸஜீயர் ஸ்வாமியிடம் ரஹஸ்யாதிகளும் பகவத்விஷயமு முதலியவற்றைக் கேட்டறிந்தவரென்பது,

"முப்புரிநூன் மார்பினன் முக்கோல்கைக் கொண்டுளான்
பொய்ப்புலனை வென்ற பொறையுடையான்-மெய்ப்பொருளைச்
சேவிக்கு நுண்ணுணர்வான் சீநிவா தன்றமியே
னாவிக் கருள்புரிந்தாள் வான்."

[மாறனலங்கார உதாரணச்செய்யுள் 121.]

"ஆதிப் பரப்பிரம நாரா யணனென்றுஞ்
சோதிச் சுடர்மயமாந் தோற்றஞ்சா—னீதிச்
சொருப முடனுருவந் தோய்ந்துளன்கா ணென்று
மொருபாந்தா மத்தானென் றும்,"

"பாங்குடைய மன்னுயிரோன் றல்ல பலவென்று
மாங்கவற்று ணீங்கா தவனென்று—மோங்கவற்றை
நித்தியமா மென்றுமுட னித்தியமன் றென்றுமதை
யுய்த்தநுபூ தாதியதென் றும்,"

"முத்திக் கவனே முதற்கா ரணனென்றும்
பத்தி விடாதே பயிலென்றுஞ்—சத்தியமாய்ச்
செல்வத் திருப்பதிவாழ் சீநிவா தன்பகர்ந்த
சொல்வித் தகமே துணிந்து,"

"நாமா னிடப்பிறவி நன்றென்றுந் தேர்ந்தனமாற்
காமா திகளாங் களைகளைந்து—பாமாலை
சாத்தியே நெஞ்சே தருமெமக்கு முத்தியென
வேத்தியே யின்புற் றிரு"

[மாறனலங்கார உதாரணச்செய்யுள் 33—36]

என்பவற்றால் அறியத்தகும்.

இவர் இந்நூலினைச்செய்து, கொல்லமாண்டு 727-ல் சித்திரை மாதத்துச் சித்திரைநக்ஷத்திரம்பெற்ற நன்னாளிற் குருகூரிற் சடகோபர் சந்நிதியிலே தமது ஞானசாரியராகிய திருப்பதி ஸ்ரீநிவாசஜீயர்முன்பு அரங்கேற்றினர். இவையும் பிறவும் பின்வரும் பாடல்களால் விளங்கும்.

[மாறனகப்பொருட் பாயிரம்.]

வடதிசை வேங்கடந் தென்றிசைக் குமரி
குடதிசைக் குலகிரி குணதிசைக் கடலெனு

மொருநான் கெல்லையி னிருநா னிலம்பக
ரைவகைத் தமிழினு ளகப்பொரு ளிலக்கணஞ்
செய்யுள் வழக்கெனச் சேரிரண் டிடத்தாற்
றிணைமுத லாகச் செப்புமுந் நான்கினோ
டணைவழு வமைதியி னைவகை யியலாய்
மொழிமுதல் வழிசார் பெனுநூன் மூன்றனுள்
வழிநூ லாமென மதிநல னமைந்து
திருமகிழ்ப் பரம தேசிகன் பெயரா
லருமறை யோர்பயி லவன தவைக்களத்
திருவகைத் தாம்புது மொழியிசைத் தவற்றுள்
உள்ளுறை யுவம மேனை யுவம
மொள்ளிய விறைச்சியோ டொன்ற வுரைத்தனன்
சிற்குணத் திருமலைச் சீநி வாதன்
பொற்புடைத் திருவடி போற்றிய புனிதன்
குருகையம் பதித்திருக் குருகைப் பெருமாள்
பொருவில்பே ரன்புடன் புரந்தருள் புதல்வன்
மருக்கமழ் சீரகத் தார்வணி கேசன்
றிருக்குருகைப்பெருமாள்கவிராசன்
அருட்குணத் தவர்புகழ் சடையன்
பொருட்டோர் நவம்புணர் புலமை யோனே.

அடைவாகு மெழுநூற்றே டிருபத் தேழா
மாண்டுமெதி சித்திரையேழ் சித்ரை யோரை
யுடையவரேழ் சந்நிதியி லுரிமை கேள்வி
யுறுசெம்ம லாஞ்சீநி வாதன் முன்பு
மடைதிறந்த வெள்ளமென மாண்போர் கொள்ள
மாறனகப் பொருளைவகுத் துரைத்தா னுய்ந்து
சடையனெனு மியற்பெயரோன் றமிழ்நா வீறன்
சார்குருகைப் பெருமாள்சீர் வணிகன் றானே.

திருப்பதிக்கோவை யென்பது மேற்கூறிய மாறனகப்பொருளிற் களவியல் வரைவியல் கற்பியற்சூத்திரங்களுக் கிலக்கியமாகத் திருமாலுகந்தருளிய நிலங்களின்விஷயமாய்ச் சற்றேறத்தாழ 455 துறைகளமைந்த 527 கட்டளைக்கலித்துறைகளாற் பலவகைநயமும் ஒருங்கமைய இயற்றப்பட்டதொரு பிரபந்த விசேடமாகும். இதனை யியற்றினர் பெயர் முதலிய விவரமொன்றும் விதந்துகூறப்படவில்லையாயினும்,

இதுவும் திருக்குருகைப்பெருமாள்கவிராய ரியற்றியதாயிருக்கலா மென்றாகித்தற் கிடனாகிறது. இந்நூற் கவிகள், பகவத்பாகவதவிஷயத்திலும் சடகோபர் விஷயத்திலும் இந்நூலாசிரியர்க்குள்ள மிக்க ஈடுபாட்டைப் புலப்படுத்துவனவாயுள்ளன. அன்றியும், சடகோபர், 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ?' 'கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ?' என்று மற்ற அவதாரங்களைக் காட்டிலும் ராம, கிருஷ்ணாவதாரங்களிலும், மற்றைத் திவ்யதேசங்களைக்காட்டிலும் கோயில், திருமலை, மாலிருஞ்சோலை யென்னும் திவ்ய தேசங்களிலும் ஈடுபட்டதுபோல, இந்நூலாசிரியரும் அவற்றில் மிக்க ஈடுபாடுடையவ ரென்பது இதனிறுதியிற் சேர்த்துள்ள விஷயசூசிகையால் விளங்கும்.

இதனுள் ஒருதுறைபற்றிவந்தபாடல்கள் பல. அன்றியும், இந்நூலாசிரியர் தாம் புதியனவாகப் படைத்துக்கொண்ட துறைகளமைய இயற்றிய செய்யுளும் பல. ஆதலின் இந்நூற் செய்யுளின்வரையறை நானூற்றின் மிக்கதாயிற்று. நிற்க

மாறனகப்பொருட் களவியல் வரைவியல் கற்பியற் சூத்திரங்களும் அவற்றுக்கிலக்கியமாயமைந்த திருப்பதிக்கோவையும் வரையப்பட்டதோரேட்டுச்சுவடி மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன் புத்தகசாலையிற் காணப்பட்டது. அதிற் காணப்பட்ட சூத்திரங்களும் திருப்பதிக் கோவைச்செய்யுட்களும் 'சில்வகையெழுத்திற் பல்வகைப் பொருளும் விளக்கித் திட்பநுட்பஞ்செறிந்தன'வாயும், 'சொன்னோக்கும் பொருணோக்குந் தொடைநோக்கும் நடைநோக்குந் துறையினோக்கோடெந்நோக்குங் காண இலக்கியமாயும், படிப்போர்க்கு நன்னோக்கும் புத்தியும் பத்தியும் முத்தியும் விளைக்கத்தக்கன'வாயும் அமைந்திருத்தலின் அவற்றைச் செந்தமிழ்நேயரும் படித்துப் பயனடையுமாறு தனிப்புத்தகவுருவிற் செந்தமிழ்ப் பிரசுரமாக வெளியிடலானேன். சங்கத்துப்பிரதியொன்றனையே துணையாகக்கொண்டு முதலில் யான் வெளியிட்ட சிலபக்கங்களைக் கண்ணுற்ற மஹாமஹோபாத்பாய தாக்ஷிணாத்யகலாநிதி ப்ரும்ம ஸ்ரீ. வே. சாமிநாதையரவர்கள், தமிழினிடத்தும் தமிழ் கற்பாரிடத்தும் தமக்கியல்பானமைந்த அன்பின் பெருக்காற் சிறியேனாகிய என்னிடத்தும் அன்புகூர்ந்து இம்முயற்சியில் யான் ஊக்கமடையுமாறு நிருபமுகமாக ஆசிகூறியதன்றி வேறு பிரதியிருக்குமிடமும் தெரிவித்தார்கள். பின் அவர்கள் குறித்த பிரதியும் சிதம்பரம் ஸ்ரீ ராமாநுஜதரிசன வித்யா சாலைத்தலைமையாசிரியரான ஸ்ரீமான் மாதவநாயுடு அவர்களிடமிருந்து

கிடைக்கப்பெற்றேன். இப்பிரதிகளிரண்டும் ஒரே மூலப்பிரதியைப் பார்த்தெழுதியவைபோலப் பெரும்பாலும் ஒற்றுமையுடையனவாகவே காணப்பட்டமையாற் சிற்சில இடங்களில் உண்மைப்பாடங்கண்டு பதிக்க இயலாமல் மூலப்பிரதிகளிலுள்ளவாறு பதிப்பித்துள்ளேன்.

மேலும், இவற்றுள் மாறனகப்பொருளில் அகத்திணையியலும் ஒழிபியலும், திருப்பதிக்கோவையில் மூலேவிலேயருமை பாங்கி தலைவற்குரைத் துடன்போக்குணர்த்தற் குதாரணமாகிய 369-ம் செய்யுளும் காணப்படவில்லை. இவற்றுள் மூலேவிலேயருமை பாங்கி தலைவற்குரைத் துடன்போக்குணர்த்தும் 369-ம் செய்யுள்மட்டும், உரிய இடத்தே சேர்த்தெழுதிப்படித்துக்கொள்ளுமாறு என் நண்பர் திருவாளர் இலக்கணவிளக்க ஆசிரியர்பரம்பரைச் சோமசுந்தரதேசிகரவர்கள் தம் நண்பரொருவர்பிரதியிற்கண்டெழுதியவாறு கீழே காட்டப்பட்டுளது.

"பல்யாணர் யானையிற் பைம்பொன்பல் கோடி பகர்வர்வெற்பை
வெல்யாணர் வெய்ய மூலேவிலே யாயெடர் மேலிறைவா
நல்யாணர் நங்கள் பெருமாள் சிலம்பிலிந் நங்கையொடுங்
கல்யாண நந்தி புரஞ்சென்று சேர்க களிதகவே."

மாறனகப்பொருளேந்தியலும் திருப்பதிக்கோவையும் பூரணமாயமைந்த பிரதியுடையார் கொடுத்துதவுவார்களாயின் இப்பதிப்பில் விடுபட்டவற்றை இரண்டாம்பதிப்பிற்சேர்த்துச் செப்பஞ்செய்து வெளியிட உதவியாயிருக்கும்.

இப்பதிப்புக்குபகாரமாகத் தம்மிடமிருந்த பிரதியை அனுப்பியுதவிய ஸ்ரீமான் மாதவராயுடு அவர்களுக்கும், திருப்பதிக்கோவையின் 369-ம் பாடல் முதலியவற்றை எழுதியனுப்பிய ஸ்ரீமான் சோமசுந்தர தேசிகரவர்களுக்கும், ஆசிகூறி என்னை இம்முயற்சியில் ஊக்கியபெரியார்க்கும், இதனைப் பதிப்பித்துவருங்கால் ஆங்காங்கெழுந்த ஐயங்களையகற்றி என்னைத் தெளிவித்த செந்தமிழ்ப்பத்திராசிரியர் ஸ்ரீ. உ. வே. திரு. நாராயணையங்கார்ஸ்வாமிக்கும் யான் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இங்ஙனம்,

திரு. கி. இராமநுஜையங்கார்,

செந்தமிழுதவிப்பத்திராசிரியர்.

---

ஸ்ரீ:

# பிழையும் திருத்தமும்.

---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௯ | 2 | கணிதாகு | கணித்தாகு |
| ௧௨ | 24 | இடந்தலை தலைவியிற்புணர்ச்சி | இடந்தலைப்பாடு |
| ௧௫ | 1 | சேந்தேன் | செந்தேன் |
| ,, | 10 | னீண்மலயத் | னீர்மலையத் |
| ௧௯ | 8 | காரிராமன் | காரிமாறன் |
| ௪0 | 18 | புள்ளிளமே. | புள்ளினமே. |
| ௪௭ | 8 | சோன்னதா | சொன்னதா |
| ௪௮ | 6 | யிருவாய்க் | யிருள்வாய்க் |
| ௬௨ | 8 | கறிவிறுத்தல். | கறிவுறுத்தல். |
| ௬௭ | 21 | மிறையவன் | மிறையவண் |
| ௭௩ | 13 | மேலேரர்காணமுங் | மேலோர்காணமுங் |
| ௭௯ | 20 | வெற்றுமை | வேற்றுமை |
| ௮௭ | 7 | ணிணங்க்குபு | ணிணங்குபு |
| ,, | 17 | காப்பதுவெ, | காப்பதுவே. |
| ௮௮ | 32 | புலந்தொடிச் | பொலந்தொடி |
| ௯0 | 11 | னயல னென்ப | னயலானென்பு |
| ௯௩ | 12 | புரவுட | புறவுட |
| ௯௪ | 16 | புரவுட | புறவுட |

---



ஸ்ரீ:

## மாறனகப்பொருளும்

# திருப்பதிக்கோவையும்.

## களவியல்

௧. அறம்பொருளின்பமென்பவற்றுளைந்திணைக்கட்
சிறந்தநன்களவெனச்செப்பியகூட்ட
மறைவெளிப்படுத்தியமன்றலெட்டனுட்
பொறைமலியாழோர்புணர்ச்சியதாகும். (௧)

௨. வரனுடைநூல்விதிமன்றலெட்டாவன
பிரமம்பிராசாபத்தியமாரிடந்
தெய்வங்காந்தருவமோடசுரமிராக்கத
மையல்கூர்பசாசமென்வருமாட்சிய. (௨)

௩. அவற்றுள்,
முறைபெறப்பின்னிகழ்மூன்றுங்கைக்கிளை. (௩)

௪. பெருந்திணைமுன்னிகழ்பெற்றியநான்கே. (௪)

௫. ஆய்ந்தகாந்தருவமதொன்றுமைந்நிலம்பெறும். (௫)

## கைக்கிளை.

௬. காண்டல்சந்தயந்தெளிதல்கருத்தறலென்
றுண்டநால்வகைத்தேயழகுடைக்கைக்கிளை. (௬)

## காட்சி

௭. நிலம்வேறென்றெனுநிலைமையராகிக்
குலநலன்றிருவுருக்குறிக்கொளிரென்று
மிறைவனுமிறைவியுமிருமையுந்தொடர்ந்த
முறைபயில்பான்மைமூதுடைமுதல்வ
னேவலிற்கண்ணுறுமியற்கைகாட்சி
காவலனுயிரினுங்கடிநிலையிலவே. (௭)

1 பூமாது கேள்வன்புகழரங்கேசன்பொருப்பில்விண்ணோர்
காமாதவஞ்செய்யவந்ததனூற்பெற்றகாமவல்லி
யாமாமிஃதினியைம்படையீந்தனன்மேவிரதி
கோமான்றனக்கவ்வுருவளிப்பான்குடிகொண்டதொன்றே. (1)

ஐயம்.

அ. எய்தியவிருவருட்சிறந்தவிறைவன்மேற்
றையுறலென்பவறிவுடையோரே. (அ)

2 ஈனவரம்பரையேயணுகாவரங்கேசற்கன்பாம்
வானவரம்பன்கொடியிடமோபொன்னிவாய்ந்தபுகார்த்
தானவரம்பன்கொடியிடமோதமிழ்நாட்டுக்கொற்கை
மீனவரம்பொற்கொடியிடமோகொடிமேவிடமே. (2)

3 அரனூர்புரந்தானூரயனூரயனூர்க்கயனும்
வானூர்குடிகொண்டுவாழ்பதியோவழுவாதநற்பா
வூரநான்மறைமூற்றவோதாதுணர்ந்துரைசெய்தகுரு
பரனுங்குருகைப்பிரான்செம்பொன்மால்வரைப்பைங்கொடிக்கே.

தேளிதல்.

௯. அலம்வரல்கண்ணிமைப்பச்சமுகக்கு
மலருயிர்ப்பதனில்வாடுதல்வெயர்த்த
லொளிர்கலன்வள்ளிவண்டெனிழலிடுத
லடிநிலந்தோய்தலவணிகழையங்
கடிவனவாகுங்காவலன்றனக்கே. (௯)

4 மால்காட்டியநெஞ்சமேவருந்தேன்மகிழ்மாறன்வெற்பி
னூல்காட்டியசிற்பநுண்ணிடைமென்முலைநோக்கியகூர்
வேல்காட்டியதுணைக்கண்காட்டமேதினிமீதினின்ற
கால்காட்டியதணங்கல்லளொன்றுலுமிக்காரிகையே. (4)

குறிப்பறிதல்.

௧0. கண்ணிணைபுகுமுகம்புரிதலிற்காரிகை
யுண்ணிகழ்வேட்கையுரவோர்க்குணர்த்தும் (௧0)

௧௧. வழிநிலைக்காட்சியுமுள்ளப்புணர்ச்சியென்
றெழில்பெறுமேனுமிணைவிழைச்சின்றாற்
கைக்கிளையென்பதுங்கடனெனத்தருமே, (௧௧)

5 அமைப்போரமைத்தற்கரிதாமடல்வல்லரக்கரென்போர்
தமைப்போர்கடந்தருள்போருளாளர்தந்தந்திவெற்பி
லுமைப்போலிவளொருமானிடமாமென்றுரைத்ததன்மே
லிமைப்போதினிலெய்துகவென்பதாங்கண்ணிமைக்கின்றதே. ()

6 அளையுந்தமிழ்த்தென்னரங்கேசன்வெற்பிலருமருந்தாய்
விளையுந்தெரிவைவிழிவடிவாளிவிரகவிடாய்
களையும்படிபுரிநாணுற்றதாற்கருத்தேகடைக்கால்
வளையுந்தனுவுறச்சோதிராதுவருந்தலையே. (6)

கைக்கிளைமுற்றும்.

---

கஉ. கைகோளிரண்டெனக்காட்டியவற்றுட்
களவிற்குரியகிளவித்தொகைதா
மியற்கைப்புணர்ச்சிவன்புறைதெளிவே
பிரிவுழிமகிழ்ச்சிபிரிவுழிக்கலங்கலென்
றொருவகையைந்தெனவுணர்த்தினர்புலவர். (கஉ)

கந. இடந்தலைபாங்கற்கூட்டம்பாங்கிமதி
யுடன்படன்மூன்றினோடொருவகையைந்தே. (கந)

கச. பாங்கியிற்கூட்டம்பகற்குறிபகற்குறி
யிடையீடிரவிற்குறியிரவிற்குறி
யிடையீடென்னவிவையுமோரைந்தே. (கச)

கரு. வரைவுவேட்கைவரைவுகடாத
லொருவழித்தணத்தல்வரைபொருட்பிரிவென
விருநிலமொன்றொழியிருபானென்ப. (கரு)

## க. இயற்கைப்புணர்ச்சி.

### [தெய்வப்புணர்ச்சி.]

கசு. கடவுளதாணையிற்கருத்துநிலைதிரிந்து
மடவரனங்கையைமன்னவனெய்தும். (கசு)

கஎ. புதுவதுவாகப்புணர்ந்துழிமகிழ்தலு
மதுபொழுதவணலமவன்பாராட்டலு
மடல்புனைவேலோனேற்புறவணிதலுங்
கடவுளினெய்துங்காலையின்விரியே. (கஎ)

[தலைவியிற்கூட்டம்.]

௧அ. உவகையுணர்த்தன்மறுத்தலுடன்படல்
புணர்தலென்றிறைவியிற்புணர்ச்சிநால்வகைத்தே. (௧அ)

௧௯. இரந்துகொண்டுறுதற்கெண்ணலிரந்து
பின்னிலைநிற்றன்முன்னிலையாக்கன்
மெய்தொட்டுப்பயிறல்பொய்பாராட்ட
லிடம்பெற்றுத்தழா அல்வழிபாடுமறுத்த
லிடையூறதனையியல்புறக்கிளத்த
னீட்டநினைந்திரங்கல்கூட்டமறுத்தெதிர்கொளல்
குறுநகையுணர்தலுறுநகைவியத்தன்
மொழிபெறவிரும்பன்முயங்குதலுறுதல்
கலவியின்மகிழ்தல்புகழ்தலெண்ணிரண்டுங்
குலமலிதலைவியிற்கூட்டத்துவிரியே. (௧௯)

இரந்துகோண்டுறுதற்கெண்ணல்.

7 இருமாநிலம்புகழ்பொற்பாரிமையமகளையிம்பர்ப்
பெருமானிடவனிரந்துகொண்டான்றிரைப்பேருலகில்
வருமால்வடமலைமேல்வாழிமையமகளையும்யா
னொருமானிடவனிரந்துகொண்டாலுமுலகியலே. (7)

இரந்துபின்னிலைநிற்றல்.

8 பொன்னந்துகில்விளிம்போர்கரத்தேந்திப்பொற்றாமரைப்பூத்
தன்னந்தனிகொய்ததோர்கரத்தேந்திமெய்த்தண்டமிழோர்
மன்னன்புகழ்க்குருகூர்மகிழ்மாறன்வரையணங்கே
யின்னன்பினுக்கியல்போதுணைவேல்கொண்டெறிகின்றதே. (8)

முன்னிலையாக்கல்.

9 பூவேட்டபோதருளாத்தெய்வமாதர்புலம்புறப்பொற்
காவேட்டபின்னைக்கருளருளாளர்கரிகிரிவாய்
மாவேட்டமார்களிறுய்ந்தெழுகாலையில்வாய்ந்தபிடி
நீவேட்டருள்கென்னவோவணங்கேயெதிர்நிற்கின்றதே. (9)

மெய்தோட்டுப்பயிறல்.

10 மஞ்சரிக்குந்துணமாலையொடாநடுவாழ்வித்தநீ
ரஞ்சரிக்கைத்திருமாலத்தியூரருளாளர்வெற்பி

னஞ்சரிக்கண்ணிதனபாரங்கண்டுநடுவறவே
சஞ்சரிக்கின்றதென்னேகுழன்மேற்சஞ்சரிகங்களே. (10)

## பொய்பாராட்டல்.

11 சங்கத்தடம்புடைசூழ்தஞ்சைமாயன்றடவரைமான்
வெங்கட்கிணைதுன்றியகாவியாவியைவிட்டனவாய்ப்
பங்கத்ததாய்ப்பயந்தோய்ந்துண்கணீர்புடைபாய்தரவே
ளங்கைத்தலத்துறுசாபத்தினுணுற்றழிந்தனவே. (11)

12 அருகற்பமின்னிடைப்பொற்கொம்பர்சாயல்கண்டஞ்சியன்றோ
பெருகற்பிணிமுகமானதும்போய்ப்பிஞ்ஞகன்பயந்த
முருகற்குவாகனமாய்வரம்வேண்டமுயலுமண்மேல்
வருகற்பகங்குருகூர்மகிழ்மாறன்வரைமயிலே. (12)

13 கூர்காலவேல்விழியாய்குருகூரன்குலவரைநின்
வேர்காலுஞ்சிந்துரவாணுதலோடுமிளிர்புருவத்
தேர்காணநுண்ணிடைகண்டமின்போன்றிந்திரதனுவுங்
கார்காலந்தோன்றியுடனேயழியுங்கலக்கமுற்றே. (13)

## இடம்பெற்றுத்தழால்.

14 பலவுங்கருதுந்திறநெஞ்சமேதவிர்பார்த்தன்பொற்றேர்
வலவன்புரிசங்கிடவன்றென்சோலைமலையினில்வாழ்
கலவஞ்செறிமயிற்சாயன்மின்னார்தந்தகாமவெங்நோய்க்
கிலவந்துவரிதழ்வாய்மருந்தார்தற்கிடமிதுவே. (14)

## வழிபாடுமறுத்தல்.

15 நிறையுடையோர்மெய்த்தகாரணமென்பானிலைநிற்பதற்கோர்
சிறையுடையோயென்பதற்கிடந்தாசெகமேழும்பெற்ற
மறையுடையோனைப்பயந்தருள்வேங்கடவாணன்வெற்பிற்
பொறையுடையோர்நிற்கொடியதென்னுதுபொனங்கொடியே. ()

## இடையூறுகிளத்தல்.

16 சொற்கத்தினைத்துணைக்கையான்மறைப்பதுதொல்புவியோர்
கற்கத்தகுவதொன்றன்றென்னவோகாரிமாறன்கற்க

நிற்கத்தமிழ்செய்குருகைப்பிரான்வெற்பினெய்தலுண்கண்
வற்கத்தினைப்பதுமத்தான்மறைத்ததுவாணுதலே. (16)

### நீட்டநினைந்திரங்கல்.

17 விற்கொண்டவாணுதலாள்பொருட்டாகமிதிலையுள்ளா
நற்கொண்டனுகைப்பதியெம்பிரான்வெற்பினன்மழலைச்
சொற்கொண்டகொவ்வையமுதூறலாந்துப்புரவுநல்காக்
கற்கொண்டநெஞ்சங்குடிகொண்டதேதுகனங்குழையே. (17)

### கூட்டமறுத்தேதிர்கோளல்.

18 மழுகாதசோதித்தலைச்சங்கநாண்மதியத்துவிண்ணோர்
தொழுகாரிராமன்சுரும்பிலந்தோதொல்லையூழ்தொடர்ந்திங்
கெழுகாதலர்கொண்டகாமவெந்தீயினிடையுலைவாய்
மெழுகாயதென்னிறைநெஞ்சேயெவன்செயல்வேறினியே. (18)

### குறுநகையுணர்தல்.

19 சுரும்பானதெண்ணறவினைவேட்டெதிர்சோலையுண்மெல்
லரும்பானதுமுகைவிண்டதொன்றுமலையாழிமண்மேல்
வரும்பாவலர்தம்பிரான்மகிழ்மாறன்வரையிலென்பால்
விரும்பாயிழைசெங்குமுதச்செவ்வாய்மலர்வெண்ணகையே. (19)

20 ஒருதலையன்றென்றுநஞ்சற்றகாமமுழுவலன்பா
விருதலையென்றுணர்வானகைத்தாள்பத்திரட்டிகையாற்
பொருதலைபத்துடையானைவென்றேனும்பர்போற்றமண்மேல்
வருதலையாதரித்தோன்வல்லவாழ்வெற்பில்வாணுதலே. (20)

### உறுநகைவியத்தல்.

21 போகாதிகனெனவாழ்பெருமானகைபொங்கவெந்த
தாகாயமுப்புரந்தானென்பாலரங்கேசனன்பர்
யோகாதிபன்வரைவாழ்பெருமானகையோங்கலுமென்
மாகாயமுப்புரநன்னீர்மைபெற்றுயிர்வாழ்ந்தனவே. (21)

### மொழிபெறவிரும்பல்.

22 விழிவேட்டஞ்செய்துளம்வேட்டதுகாட்டவிளங்கியயான்
மொழிவேட்டலுமுந்துவெண்ணகைதான்முத்தாகிமுத்தி

வழிவேட்டவர்புகழ்வைகுந்தைமாயன்வரையின்மூங்கீர்ச்
சுழிவேட்டஞ்செய்யக்கடைமருந்தாமிவர்சொல்லென்னுமே (22)

முயங்குதலுறுதல்.

23 பெருமாநிலத்தாவின்பகுவாயினுட்பெற்றிருந்த
வருமாமணியையள்ளிக்கொள்வதாமும்பாராதரிக்கும்
கருமாமணிகடன்மல்லைப்பிரான்வெற்பிற்காமரின்பங்
தருமாமணியைத்தனித்திங்ஙனேயெய்துந்தன்மையதே. (23)

கலவியின்மகிழ்தல்.

24 வேட்டார்புதல்வற்பயந்தனராகிமிழற்றுமின்சொற்
கேட்டாற்றழையுஞ்சுகத்தொடொன்றுகுஞ்சங்கீதமறைப்
பாட்டாவியற்றமிழ்தேர்நம்பராங்குசன்பைந்துடரித்
தோட்டார்நறுமென்குழலியொடாயசுகானந்தமே. (24)

புகழ்தல்.

25 போராழியங்கைப்பொலிந்துநின்றூர்நறும்பூந்துளபத்
தாரார்தமிழ்க்குருகூர்வரைவாழின்பத்தையல்செவ்வா
யாராவமுதம்பரிமளத்தோடிங்கருளுமென்மை
கூராய்பவளக்கொடியேதுணையல்லைகூறுகிலே. (25)

இயற்கைப்புணர்ச்சிமுற்றும்.

---

## ௨. வன்புறை.

௨0. சந்தயந்தவிர்தறணத்தலுணர்த்தலென
வந்தவிரண்டும்வன்புறைவகையே. (௨0)

௨௧. அணிந்தமைகூறலறயப்புரைத்தல்
பணிந்தெழுதெய்வப்பான்மையுணர்த்தல்
பிரியேனென்றல்பிரிந்துவருகென்ற
விடமணித்தென்றலிருபதமும்வேண்ட
லுடனேழ்வன்புறைக்குரித்தெனும்விரியே. (௨௧)

அணிந்தமை கூறல்.

26 பாலாழியிற் றுயில்கூர்பற்பநாபன் பயிலநந்தைக்
கோலாகலவுயிர்ப்பாங்கியர் தாந்திருக்கோலஞ்செய்யு
மேலாயகைவண்ணமெல்லாமெழுகுமிலாஞ்சனையும்
போலாயதுவருக்தேன்மருந்தேமென்பொனங்கொடியே. (26)

பெருநயப்புரைத்தல்.

27 தெளிகாவியப்புலவோர்புகழ்மாயன்சிறுபுலியூர்க்
குளிர்காவினங்கைகுமுதச்செவ்வாய்க்கொவ்வைபோற்பகற்போ
தொளிர்காமர்செங்குமுதம்பெற்றதாயமுதூறுங்கொவ்வை
யளிகாள்பசுங்கிளிகாளுளவோபண்டறிந்ததுவே. (27)

தெய்வப்பான்மையுணர்த்தல்.

28 மழுவலங்காரனும்வச்சிரபாணியும்வாய்ந்தவிண்ணோர்
குழுவலங்காரத்தொடுந்தொழுமாயன்குறுங்கைவெற்பி
லுழுவலன்பாற்பின்றொடர்ந்தநன்பால்கொணர்ந்தூட்டநம்மிற்
றழுவலிங்கார்பெறுவார்செறுவாரெவர்தாழ்குழலே. (28)

பிரியேனென்றல்.

29 நறவேகமழ்தண்டுழாய்நறையூர்நின்றநம்பிவெற்பி
னிறவேலனையமதர்விழியாய்நின்னையோர்கணத்துந்
துறவேன்றமரறியாவகைக்காத்துறந்தாலுஞ்சற்று
மறவேன்பினையென்னனேபிரிந்தாற்றுமென்மன்னுயிரே. (29)

பிரிந்துவருகேன்றல்.

30 வாசம்பயில்குழலாய்வடவேங்கடவாணன்வெற்பி
னேசம்பயிலுநினதுயிர்ப்பாங்கிநினைந்திவண்வந்
தாசங்கையெய்துமுன்பாயத்தொடாடரைமாத்திரைக்கென்
றேசம்பயின்றிவண்வந்துனைமீளத்தெரிசிப்பனே. (30)

இடமணித்தென்றல்.

31 சுனைத்தேமலர்க்குழலாயுங்கண்மால்வரைச்சோலையிற்பூஞ்
சினைத்தேறலிலெங்கள்செண்பகமாறன்றிருக்குருகூர்

மனைத்தேமலர்ப்பொழின்மாங்கனியானதைமந்திபரீஇ
நனைத்தேயருந்தும்படிக்கணிதாகுநவிலுகிலே. (31)

## இருபதமும்வேண்டல்.

32 காணங்கடந்தபொறையுடையோர்தொழுங்காரடையா
ரிரணங்கடந்ததிகிரிப்பிரானிந்தளூரன்வெற்பி
லரணங்கடந்தின்றுபோயணங்கோடும்வந்தஞ்சலென்றுற்
சரணஞ்சரணமெனுந்திருநாமந்தகுமுமக்கே. (32)

வன்புறை முற்றும்.

---

## ௫. தெளிவு.

௨௨. இறைவன்கூறுதலிறைவிதேறுத
லறைவர்தெளிவென்றறிவுடையோரே. (௨௨)

33 செகத்தாரொடும்பொய்யுரையாதவருயிர்தீரவொன்று
முகத்தாரைவைத்தங்ககன்றுறையார்திருமோகைப்பிரான்
சுகத்தாடரவிற்றுயில்காளமேகஞ்சுரும்பினிலென்
னகத்தார்வருவதின்றென்பதொன்றுலுமவமதிப்பே. (33)

தெளிவுமுற்றும்.

---

## ௬. பிரிவுழிமகிழ்ச்சி.

௨௩. வரிவளைசெலவினைமனத்தொடுகூறலும்
பரிவுடைமான்றேர்ப்பாகனொடுகூறலும்
பிரிவுழிமகிழ்ச்சியின்விரியெனப்பெறுமே. (௨௩)

வரிவளைசெலவினைமனத்தோடுகூறல்.

34 முடியானதுதரித்தோங்கியகோகன்முகம்புரிந்தால்
அடியார்முகந்திரும்பாததென்னுவுண்மையாரணச்சொற்
படியாயிரந்தமிழ்தேர்மாறன்வெற்பிற்பண்டேமுயற்சி
மடியாதமந்திரத்தந்திரத்தான்றன்மனங்குறித்தே. (34)

(செல்லுங்கிழத்தி செலவுகண்டுளத்தோடுகூறலென்பது மீது).

(செல்லுங்கிழத்திசெலவுகண்டு) பாகனொடுகூறல்.

35 தேர்க்காதலிற்கொடுவந்தருள்பாணவென்சிந்தைக்கன்பு
தாக்காதரவிற்பின்பார்த்ததனுற்றமிழ்வேதந்தந்த
வாக்காலுயர்ந்தகுருகூரன்மாறன்வரையிளமா
னோக்கானதுசிங்கநோக்கானதற்புதநோக்குகவே. (35)

பிரிவுழிமகிழ்ச்சிமுற்றும்.

---

## ௫. பிரிவுழிக்கலங்கல்.

௨௪. மருள்பெறநிகழ்த்தலுந்தெருள்பெறநிகழ்த்தலும்
பிரிவுழிக்கலங்கல்வகையெனப்பெறுமே. (௨௪)

௨௫. புனமயிற்சாயலையாயம்போற்றலிற்
கனவுகொலென்றலும்வாயில்காண்டலும்
பண்புபாராட்டலும்பயந்தோர்ப்பழிச்சலுங்
காதடர்கண்படைபெறாதுகங்கு
னோதலும்பிரிவுழிக்கலங்கல்விரிநோக்கம். (௨௫)

கனவுகோலென்றல்.

36 பொற்பனவாங்கலையெல்லாம்பொதுவறப்பூரித்துண்மை
கற்பனவாமறைகற்றருண்மால்கண்டியூரன்வெற்பி
னிற்பனவாமின்னருமைகண்டாற்பெற்றநீதிநெஞ்சே
சொற்பனமோமற்றியாதோதுணிந்துறச்சொல்லுகவே. (36)

வாயில்காண்டல்.

37 ஒண்போதகஞ்சொன்னமாலுறையூரனுயர்வரைவாய்ப்
பண்போன்மிழற்றும்பணிமொழியாளுடன்பாவித்தின்ப
நண்போடுறுதற்குநன்னெஞ்சமேயினிநாட்டிவிரு
கண்போலுறுங்கட்கிவளென்றுகாட்டுங்கயற்கண்களே. (37)

பண்புபாராட்டல்.

38 கதியென்பவர்க்கருள்காட்கரைமால்வெற்பிற்கன்னியருங்
கதியென்புனேற்கற்பினுண்மையுதாமுகச்சோதியுவா

மதியென்பனேற்பகற்சோதியுருகளம்வாய்ந்தசங்க
நிதியென்பனேலதுசெம்மையுருதென்னிகழ்த்துவனே. (38)

பயந்தோர்ப்பழிச்சல்.

39 செந்தமிழ்க்கல்வியுடன்கவிப்பாகஞ்செறிந்தசெல்வ
மைந்தனைப்பெற்றவர்போலென்றும்வாழிமலர்மகள்சேர்
சுந்தரத்தோளழகன்னலங்காரன்சுரும்பிலின்பச்
சந்தனப்பூண்முலையைப்பெற்றகோதையுந்தாதையுமே. (39)

40 கோட்டானைகூறியமாலாதிகேசவன்கோதறுநீர்
வாட்டாறுகாவலன்மால்வரைவாயென்மனங்களிப்பான்
ருட்டாமரைத்திருவைப்பெற்றதாயுநற்றாதையும்பொன்
னுட்டாருங்காமுறநீடூழிவாழியிந்நானிலத்தே. (40)

கண்படைபெறுதுகங்குனோதல்.

41 வண்பாவலர்நல்குரவாநெருப்பின்மருத்துவெந்தீப்
புண்பாடிழைக்கப்பெறுதென்பதென்மலர்ப்பூவைக்கன்பாம்
பண்பார்புகழ்த்திருப்பாடகத்தான்வெற்பிற்பாவைதன்னுற்
கண்பாடரிதென்னவைத்தவெங்காமக்கனலைவிட்டே. (41)

பிரிவுழிக்கலங்கல் முற்றும்.

---

## கூ. இடந்தலைப்பாடு.

உசு. முயற்சியிற்றெய்வந்தெளிதன்முயங்குத
லியக்குதலெனமூவகைத்திடந்தலையே. (உசு)

உஎ. சேறலிற்றந்ததெய்வந்தருமெனச்
சேறல்காண்டல்சேர்தல்புகழ்த
லாயத்துய்த்தலோடைந்திடந்தலையென
மேயபின்னுறுபுணர்ச்சியின்விரியே. (உஎ)

தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

42 மறவாரணஞ்சொன்னமாலிருஞ்சோலைமலையில்வைகு
மறவாழியந்தணன்மாலலங்காரனணிவரைவாய்

நறவார்குழலியைநன்னெஞ்சமேமுன்னைநாளளித்த
திறவாதிருந்ததெழுகசென்றுலெய்துமின்னமுமே. (42)

தலைவியைக்காண்டல்.

43 போதிக்குஞானப்புலவர்மெய்ந்நூல்பொறியைந்துமெய்தாச்
சோதிச்சொருபின்னுயிரென்பதென்சுடராழியங்கை
யாதிப்பாரனெங்கண்மாலலங்காரனணிவரைவாய்
வேதித்தெனதுயிர்பெண்ணுருவாகிவெளிநிற்கவே. (43)

(உயிரெனவியத்தலென்பதுமிது.)

முயக்கல்.

44 வேரிப்பசுந்தண்டுழாய்மாயன்விண்ணகர்வெற்பில்விண்ணோர்
பூரித்தபுத்தமுதக்குடநீபுத்தமுதம்பொங்கும்
வாரித்தலங்கனிவாய்கனிவாயினில்வாய்வைத்தன்பு
பாரித்தருந்தும்புரந்தரனினின்பப்பைந்தொடியே. (44)

புகழ்தல்.

45 புண்ணியகோடிப்புயலையன்பாய்ப்புண்ணியங்கள்புத்தே
ணண்ணியநாட்செய்தனுண்டெனத்தேர்தற்குஞாபகமாம்
விண்ணியலாகரர்சேமித்தபானம்வியனிலத்தோர்
பெண்ணியலாய்மதுரந்தெவிட்டாதருள்பெற்றியதே. (45)

ஆயத்துய்த்தல்.

46 கரியானதாதியின்மூலமென்றோதக்கருணைநெஞ்சத்
தரியாதுதவியகார்தஞ்சைமாயன்றடங்கிரிமேல்
விரியாழ்சுனையுள்வலம்புரிசூழ்தருவெள்வளைபோற்
பிரியாதவாயத்திடைசென்றுகூடுகபெய்வளையே. (46)

இடந்தலை தலைவியிற்புணர்ச்சி முற்றும்,

---

எ. பாங்கற்கூட்டம்.

உஅ. சேர்தல்வினுதல்செப்பலெதிர்மறை
நேர்தல்கூடல்கூட்டலென்றுங்குப்
பார்புகழெழுவகைபாங்கற்கூட்டம். (உஅ)

உக. செம்மல்பாங்கனைச்சேர்தலும்பாங்கன்
செம்மலோடுற்றதுவினவுதலுஞ்செம்ம
லுற்றதுரைத்தலுமற்றவன்கழறலு
முரவோன்கழற்றெதிர்மறுத்தலுமுரவோற்
பழித்தலும்வேட்கைகழித்தற்கருமை
சாற்றலுந்தன்மனத்தழுங்கலுந்தலைவனே
டேற்றற்கழுங்கலுமேகவனென்றலு
மெவ்விடத்தெவ்வியற்றென்றலுமிறைவ
னவ்விடத்தவ்வியற்றென்றலும்பாங்க
னிறைவனைத்தேற்றலுங்குறிவழிச்சேறலு
மிறைவியைக்காண்டலுமிறைவியையெளிதிற்
காட்டியகடவுளைக்கண்ணுற்றிறைஞ்சலும்
வாட்டடங்கண்ணியைமதித்தவன்வியத்தலு
மிகழ்ந்ததற்கிரங்கலுமிறைமகன்றனையே
புகழ்ந்தவன்வியத்தலும்புரவலன்றன்னொடு
நவ்வியங்கண்ணிநன்னிலையுரைத்தலுஞ்
செவ்விசெப்பலுஞ்செம்மலங்கேகலு
மிணர்மலர்க்குழலியையிறைவன்காண்டலும்
புணர்தலும்புகழ்தலும்பூங்கொடிதன்னைப்
டாங்கியொடுவருகெனப்பகர்ந்தபின்ன
ராயத்துய்த்தலொடம்மூவொன்பது
மேயபாங்கற்கூட்டத்துவிரியே.　(உகூ)

## செம்மல் பாங்கனைச் சேர்தல்.

47 முதலையைச்சாய்ந்திபங்காத்தருள்கார்திருமுட்டத்தெங்கோன்
றிதலைமென்பூண்முலைப்பூமகள்கேள்வன்செழுஞ்சிலம்பிற்
குதலைமென்பாகுடைக்கொம்பானிலைகுலையாதளிக்கு
மதலையன்றானுண்டெமக்குறைநயாய்கோண்மடநெஞ்சமே.　(47)

## பாங்கன் றலைவனோ டுற்றதுவினுதல்

48 கூராழியங்கைத்திருநெடுமாயன்குடந்தையில்வா
ழாராவமுதினருள்பெற்றதா நுண்ணறிவமைந்த
போராண்மையுள்ளங்கலங்கியதேயன்றிப்பீடுடைநின்
வீராகரத்திண்புயமுமன்றோவென்மெலிவுற்றதே.　(48)

### தலைவன் உற்றதுரைத்தல்.

49 சினமாறினர்புகழ்சேறையின்மால்வெற்பிற்சேர்ந்தொருமான்
கனமானவல்லியத்தைத்தடிந்தேறிக்களித்திடுமென்
மனமானதைப்பற்றியகலையாவும்வளர்தனக்கச்
சினமானதனிற்பிணித்துநண்பாகொண்டியங்கினவே. (49)

### பாங்கன்கழறல்.

50 நடித்தாடரவிற்றுயின்மாயனுறைகநறுங்கிரியோர்
பிடித்தானநுண்ணிடைமான்பொருட்டான்மையல்பெற்றனையால்
வடித்தாரைவேலண்ணலேகலையாவுமனத்தடங்கப்
படித்தாயுனக்கிங்கிதுவோமுடிவிற்பலித்ததுவே. (50)

51 தொண்டரிகத்தன்புவிட்டன்புகூரன்பிற்சோதிகறைக்
கண்டரிகத்தலின்மன்றத்துள்ளார்வெற்பகாமர்மென்சொற்
பண்டரிகத்தவியத்திளமானின்படிமத்துள்ளப்
புண்டரிகத்தைப்புறங்கண்டதானிறைபொற்புடைத்தே. (51)

52 மூனமாமதிக்கும்புகழ்க்காளமேகந்தென்மோகைவெற்பா
கனமாமதிக்குமறுவைத்தமானினுங்காமரின்பப்
புனமான்கலைகளறுபத்துநாலும்பொருந்தியநின்
மனமாமதிக்குமறுவைத்ததான்மிகமாண்புடைத்தே. (52)

### கழற்றெதிர்மறுத்தல்.

53 உரிசித்திடத்தெவிட்டாமருந்தானதையோகைவிண்ணோர்
குரிசிற்கருளுங்குறுங்குடிமாயன்குலகிரிமேற்
பரிசித்தென்னெஞ்சந்திறைகொண்டுநீங்கும்பொற்பாவையைநீ
தெரிசித்திடினண்பனேயுரையாயிந்தச்சித்திரமே. (53)

54 வானமர்சோலைவரமங்கைவாணன்வரையினண்பா
ஊனமில்லாவுனைப்போலுயிர்ப்பாங்கனொருவனுண்டே
லேனமதாதிமுன்பேனமதாவனிலங்கைமுந்நீர்த்
தானமதேன்கடப்பானிடப்பானண்டர்தாருவையே. (54)

### கிழவோற்பழித்தல்.

55 வீரைவளாகத்துமும்மதமாவைவிழுங்குமாத்
தேரையின்வாய்விழுங்கப்பட்டதேயொக்குந்திண்சிலம்பா

பேரையராதிபன்ஞானப்பிரான்வெற்பிற்பேதைசேந்தேன்
றுரையறுசெய்தலுண்கண்ணினீபட்டதன்மையதே. (55)

தலைவன் வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

56 கற்பாவைவைப்பெண்ணுருவாக்குஞ்சீரடிக்கண்ணன்மென்பூ
நற்பாவைநீங்கப்பெறுநெடுமானறையூரன்வெற்பிற்
பொற்பாவைசென்றெதிர்ந்தானன்பனேபொன்செய்பாவையன்பாய்
நிற்பாயெனப்பின்றொடருமென்றுமென்னிறைபின்னையே. (56)

57 திருப்பாற்கடலமுதுண்டார்மறித்துமதத்தெள்ளமுதுண்
விருப்பாலிடர்க்கடல்வீழ்ந்தயர்வேலையில்வெவ்விடங்கூர்
நெருப்பாங்கடலிடைத்தள்ளியதாங்கண்ணனீண்மலயத்
திருப்பாலைவேட்டலெனநண்பநீசொன்னவேழைமையே. (57)

பாங்கன் தன்மனத்தழுங்கல்.

58 மருந்தானதையொருபெண்ணுருவாக்கிமதுரந்தன்னைப்
பொருந்தாதரவிற்செங்கேழிதழாக்கியம்போருகத்தான்
விருந்தாவனத்துறைமாலும்பர்நாயகன்வெற்பின்மண்மேற்
றருந்தாழ்குழலென்பதாலிதற்கேதினிச்சாற்றுவதே. (58)

59 வடியார்திகிரிப்பிரான்பதம்போற்றியமாறன்வெற்பிற்
கொடியாருபயமுலைக்களியானைகுறுகிடையோர்
பிடியானதைக்கொல்லுமாற்பெருமானைப்பிணிப்படுத்த
மடியாதுதீர்க்கமுடியாதொருவர்க்கிம்மையிலையே. (59)

பாங்கன் தலைவனோடழுங்கல்.

60 குறையாதபாற்கடல்வெவ்விடங்கூடிலுட்கொள்பவரெவ்
வுறையால்விடந்தவிர்த்தாட்கொள்ளுவாருறையூரனுண்மை
முறையாதரிக்குங்கருணாகரன்வரைவாழ்மயிலாற்
பொறையானதைமெய்ந்நிறையொடும்போக்கும்புரவலனே. (60)

ஆண்டகை பாங்கனை யவனேகென்றல்.

61 பல்வாய்ப்பஃறலைப்பாம்பணைமாதவன்பாடகத்தின்
சொல்வாயமுதக்குமுதச்செவ்வாய்மடத்தோகையைநீ
செல்வாயெனின்மலர்ச்சோலையுட்காண்பதுதிண்ணமென்றால்
வெல்வாரெவர்நண்பனேயொப்பதாரென்னைமேதினிக்கே. (61)

எவ்விடத்தேவ்வியற்றேன்றல்.

62 கடமேசூழிக்குங்கரடாசலஞ்சொன்னகள்வன்முந்நீர்
வடமேதுயிலணையாய்க்கொண்டமாயன்வைகுந்தைவெற்பா
திடமேதருநின்னிறையேநிறைகொண்டதெய்வம்வைகு
மிடமேதியலெவ்வகைத்தென்றகூறுகவின்புறவே. (62)

இறைவன் அவ்விடத்தவ்வியற்றேன்றல்.

63 வரகுணமங்கைப்பதித்திருமால்வஞ்சகரைவெந்தீ
நரகுணவைத்ததிகிரிப்பிரான்வெற்பினண்பபுத்தேள்
புரகுணபான்மன்னன்பொற்காநிகர்க்கும்பொதும்பர்கண்செய்
விரகுணர்வானதைப்போழுஞ்செவ்வேலந்தமெல்லியற்கே. (63)

பாங்கன் இறைவனைத் தேற்றல்.

64 வெவ்விடத்தாரைவைவேல்விழிமாதினைவெற்பளித்தாள்
வவ்விடத்தானும்புகழ்வடவேங்கடவாணன்வெற்பா
மவ்விடத்தாய்விரைவிற்கண்டுநானுன்னடியிணைக்கீ
ழிவ்விடத்தாமளவும்வருந்தேலென்னிறைபவனே. (64)

குறிவழிச்சேறல்.

65 வளையாழிகைக்கொண்டமால்வடவேங்கடவாணன்விண்ணோர்
கிளையாய்வணங்குங்கருணைப்பிரான்வெற்பிற்கிஞ்சுகவா
யிளையாடனித்தலர்கொய்தயலாயவிளமரக்கா
விளையாடுமென்மன்னன்செய்தமுன்னைநல்வினையதுவே. (65)

இறைவியைக்காண்டல்.

66 குளந்தாபுரிவந்தருண்மாயக்கூத்தன்குவலயமன்
றளந்தானணிவரைமாம்பொழிலீதந்தமாவடுவைப்
பிளந்தாலனையதுணைக்கண்களாமிவைபேரறிவுந்
தளர்ந்தானுணர்த்துமவளேயிவள்சந்தயமில்லையே. (66)

காட்டியகடவுளைக்கண்ணுற்றிறைஞ்சல்.

67 சூட்டியதண்ணந்துழாயார்துவரைச்சுரும்பின்முத்தம்
பூட்டியபூண்முலைப்பொன்னைநெஞ்சேபுறம்போந்துநிற்பக்
காட்டியதெய்வங்கண்டாய்முன்னைநாளினுங்காவலனைக்
கூட்டியதெய்வமதற்கேயடிமைநெறித்தருளே. (67)

வாட்டடங்கண்ணியைமதித்தவன்வியத்தல்.

68 கழுவாமணிக்கின் னுயிர்கொடுத்தேகண் ணுங்கா லுங்கையும்
வழுவாதமைத்ததெனநிற்றலான்மங்கைவாணனெங்கோ
னெழுவாரிதிதிகழ்பார்புகழ்கார்வெற்பிலெய்தில்விண்ணோர்
தொழுவார்மனுகுலமென் றுரைத்தானுமித்தோகையையே. ()

69 அளியார்துளவப்பிரானமூந்தூர்வருமாயனன்பர்க்
கெளியானருவித்தடவரைவாயிடையென் றுகொண்ட
வெளியாரிறைவனைப்பூட்டியகாதல்விலங்கைக்கொங்கைக்
களியானையேயறுத்திங்கிதங்கூறுங்கடாக்களிறே. (69)

பாங்கன் தலைவனையிகழ்ந்ததற் கிரங்கல்.

70 கருதாரைவென்கண்டதென்பேரைவாழ்குழைக்காதர்முந்நீர்
வருதாரையாய்க்கண்டதற்குமுன்னேகொற்றவாலியென்பா
னொருதாரையாலூரனுட்கினனற்பெருமானொருமா
னிருதாரையாலூரனுட்கியதாரையிகழ்வதன்றே. (70)

71 அருபுருபன்றிறையென்பார்மதிப்பவந்தாமம்பெற்ற
சொருபுருபம்பரமென்றருண்மாறன் றடரியின்மா
னிருபுருவச்சிலையாலிணைவாளியியக்கியதவ்
வுருபுருவச்சென் றலையாதிராதண்ணலுள்ளத்தையே. (71)

தலைவனைவியத்தல்.

72 பொன்னாரமார்பினன்காசினிவேந்தன்புளிசைவெற்பிற்
சொன்னான்மனத்தினுட்கொண்டான்மதுரஞ்சுரப்பதொன்றாய்
முன்னாளிஃதொருபெண்ணுமெனமூண்டகனமைக்கு
மன்னாமுதைப்பிரிந்ததெவ்வாறந்தமன்னவனே. (72)

பாங்கன் றலைமகளைக்கண்டமைகூறல்.

73 வாவிக்கமலத்துணைச்சேவனீங்கவரும்வழிபார்த்
தாவிப்பெடையன்னநிற்பதுபோன்றனந்தேசன்மண்மேற்
பாவிக்குந்தேவர்பிரான்பற்பநாபன்பனிவரைப்பூங்
காவிற்றனித்தொருகொம்பர்வெற்பாநிற்பக்கண்டனனே. (73)

### சேவ்விசேப்பல்.

74 படிமேலிருச்கைத்தமிழ்செய்தமாறன்பழையவிண்ணோர்
முடிமேலிருக்கும்பதாம்புயத்தான்வெற்பின்முத்தநிரைத்
தொடிமேலிருக்குங்கரத்தாளிடைக்குத்துணைமுலையோர்
கொடிமேலிருக்குந்துணைமேருநேர்வருங்கொற்றவனே. (74)

### சேம்மலக்கேகல்.

75 வண்டேய்பசுந்துளபத்தார்தொலைவில்விமங்கைமின்னைக்
கண்டேனெனநண்பநீசொன்னமாற்றங்கவிக்கரசன்
பண்டேசனகியைக்கண்டேனெனும்பண்புடைத்தினிக்கைக்
கொண்டேன்றிருவையெணையொப்பதாரிக்குவலயத்தே. (75)

### தலைவன் தலைவியைக் காண்டல்.

76 அனப்பேடையைமென்மயிற்பேடையைப்பெண்ணரசியென்றென்
மனப்பேதைமையினணுகாவகைமகிழ்மாறன்வெற்பிற்
கனப்பேரளகமலர்சூடித்தாமரைகைக்கொண்டின்பத்
தனப்பேதைமுன்னின்றதண்ணளிசாலத்தகவுடைத்தே. (76)

### புணர்ச்சியின்மகிழ்தல்.

77 அலையிடங்கொண்டபுனற்காவிரித்தென்னரங்கன்மைதோய்
மலையிடங்கொண்டவிலவிதழ்வாய்மடமாதுபொற்பூண்
முலையிடங்கொண்டதிருமார்புறமெய்முயங்கமுன்போங்
கலையிடங்கொள்பிறைபோற்புதிதாய்மிகுங்காமமுமே. (77)

78 மைதிகழ்பூம்பொழிற்கோளூர்வரும்வைத்தமாநிதிவான்
பைதிகழ்பாம்பணைமேற்றுயில்கார்வெற்பிற்பாவையெய்தாத்
தெய்தியின்வாய்மதிப்பின்னீர்மைத்தாயுறத்தேய்ந்திடும்வந்
தெய்தியநாட்பிறைபோனிறைநீர்மைத்தெனதெழிலே. (78)

### புகழ்தல்.

79 கவளக்கரிசொன்னதென்பேரைவாழ்குழைக்காதர்வெற்பிற்
குவளைத்துணைக்கண்களான்மொழிகாட்டிக்குமுதச்செவ்வாய்ப்
பவளத்தினிற்சுவையூறொளிநாதம்பரிமளங்கூர்
தவளத்தவாமுத்தம்பரிவள்போலத்தருபவரே. (79)

தலைமகன் தலைமகளைப் பாங்கியோடுவருகெனப் பகர்தல்.

80 ஆழியும்வால்வளையுந்தரித்தோனரங்கேசன்விண்ணோர்
வாழியவென்னவரந்தருவான்வெற்பில்வாசநறுங்
காழியல்சந்தனச்சோலையுள்ளேவருங்காலையினித்
தோழியுநீயுமுடனிவண்சேர்கநுடியிடையே. (80)

தலைமகன் தலைமகளைப் பாங்கிற்கூட்டல்.

81 வழுவாதவண்டமிழ்தேர்குருகூர்மகிழ்மாறன்விண்ணோர்
தொழுகாரிராமன்றடரியின்வாய்ச்சுடர்தூண்டுஞ்செய்ய
கழுவாமணியனையாய்கணப்போதுநின்கண்ணகலாக்
குழுவாயுயிரொடொன்றுமடவாரொடுங்கூடுகவே. (81)

பாங்கற்கூட்டம் முற்றும்.

---

[அ—௯0. பாங்கிமதியுடன்பாடு.]

௯0. மதியுடன்படலொருமூன்றன்வகையே
முன்னுறவுணர்தல்குறையுறவுணர்த
லிருவருமுளவழியவன்வரவுணர்த
லாநெறித்தென்பரறிவுடையோரே. (௯0)

அ. முன்னுறவுணர்தல்.

௯க. அவற்றுள்,
நாற்றமுதலாய்ப்பயில்வீறுமென
வாற்றல்கூரேழினுமையமுற்றோர்தலுஞ்
சாற்றியவேழினுமையந்தீர்தலு
மெய்யினும்பொய்யினும்வழிநிலைபிழையாது
பல்வேறுகவர்பொருள்பகர்ந்துநாடலுமென
மூன்றுகூற்றனமுன்னுறவுணர்தல். (௯க)

ஐயமுற்றோர்தல்.

82 வேற்றுப்பரிமளந்தோண்மலைநாட்டங்கள்வேறுபட்ட
தோற்றத்துடன்சிறுசோறுண்டிரீத்துத்தொழின்மறைத்தே
தேற்றச்செலவுந்துயிலஃப்பயில்வுஞ்செறிந்ததென்னே
மாற்றற்றபொன்னென்பதாமகிழ்மாறன்வரையயிற்கே. (82)

83 கல்லென்றதைப்பெண்ணுநுவாக்கியகண்ணன்கச்சிவெற்பி
னெல்லென்றதண்சுனைநீர்குடைந்தோநறையூமுஞ்செவ்வி
மெல்லென்றவாசமலர்கள்கொய்தோவன்றிவேறுகொல்லோ
புல்லென்றது திருமேனியந்தாமப்புரிகுழலே. (83)

ஐயந்தீர்தல்.

84 மணியாமெனத்திகழ்மேனிப்பிரான்மங்கைவாணன்வெற்பிற்
றணியாதசோதிப்பிறைதனைநீதலைக்கோலமென்று
மணியாயவயவமாய்த்தலைமேற்கொண்டமைந்துநின்று
பணியாததென்கொல்கரத்தாமரையிற்பணிமொழியே. (84)

[பிறைதொழுகென்றலு மிது.]

85 பூமகளாருயிராம்புருடோத்தமன்புத்தமுதன்
றேமுறவேகடைநாட்டம்பமாதலினிப்பிறைதான்
கோமளமேமென்குமுதசகாயன்குபேரனென்றுற்
றூமதமேன்மலர்வாய்திறந்தேவந்தனைசெய்பவே. (85)

பல்வேறுகவர்பொருள்பகர்ந்துநாடலுட்
சுனையாடல்கூறி நகைத்தல்.

86 வானிறந்தோய்ந்ததிருமேனிமாயன்வடமலைவாய்ச்
சூனிறந்தோய்ந்தவலம்புரிசேர்சுனைநீர்குடைந்தாற்
றேனிறந்தோய்ந்ததென்னீனிறந்தோய்ந்தகண்செங்கனிவாய்
பானிறந்தோய்ந்ததென்மெய்ந்நனையாததென்பைந்தொடியே. ()

சுனைநயந்துரைத்தல்.

87 வாதாம்பரசமயத்தைவென்றோன்மகிழ்மாறன்வெற்பிற்
சூதாம்பணைமுலையாய்மணந்தாடுஞ்சுனைக்கமலஞ்
சேதாம்பலையுங்கருங்காவியையுஞ்செங்காவிவெள்ளைப்
போதாம்பலாய்த்தரில்யானும்வந்தாடுவன்பூஞ்சுனையே. (87)

வேறுபடுத்திக்கூறல்.

88 கொத்தார்நறைவகுளத்தார்சுரும்பிலென்கோதையைநீ
யொத்தாலும்வெறபணங்காமென்பதேயுண்மையுண்மைமுன்னாட்
புத்தாரமுதளித்தாயிற்றைநாளிலிப்பூஞ்சுனைசே
ரித்தாமரைகளிலெத்தாமரைநின்னையீன்றதுவே. (88)

நடுங்கநாடல்.

89 பிருதித்திருநெடுமாலெம்பிரான்வெற்பிற்பெண்ணரசே
பருதிப்பனிப்பிறைக்கோட்டொருவேழம்படிறிழைப்பான்
கருதிக்கடுவெளிபோன்றெதிர்போழ்தொருகாளைவன்போர்க்
குருதிச்சுடர்வடிவேலான்மருப்பைக்குறைத்தனனே. (89)

முன்னுறவுணர்தன் முற்றும்.

---

கூ. குறையுறவுணர்தல்.

நஉ. பெட்டவாயில்பெற்றிரவுவலியுறுத்தோன்
கண்ணியுந்தழையுங்கையுறையேந்தி
யூர்பேர்கெடுதியுடன்பிறவினவலும்
யாரிவரிவர்மனத்தெண்ணம்யாதெனத்
தேர்தலுந்தெளிதலுமெனத்தெளிவுடையோ
ரோரிரண்டென்பகுறையுறவுணர்தல். (நஉ)

பாங்கியை யிரவுவலியுறுத்தல்.

90 வார்வைத்தகப்படுத்திக்கொண்டமான்றன்வனம்புகுந்தாற்
பார்வைப்பிணையிற்படுப்பவர்போனறைபாய்துளபத்
தார்வைத்ததிண்புயத்தான்றஞ்சைமால்வெற்பிற்றம்மிலொன்றுஞ்
சேர்வைப்பிணையைத்தொடர்ந்தானங்கைப்படுந்திண்ணமிதே. ()

ஊர்வினுதல்.

91 கடியிருப்பாம்பொழில்சூழ்கள்வனூர்வருங்கண்ணன்வெற்பில்
வடியிருப்பாங்துணைக்கண்மடவீர்மலர்மாளிகையெம்
றடியிருப்பாமுங்கள்பேருருளதொன்றறிந்ததிங்குக்
குடியிருப்பாமுங்கள்சீறூரெவனென்றுகூறுகவே. (91)

பேர்வினுதல்.

92 ஒப்பேகருதின்மலர்மகளாம்பொறையுன்னின்மூங்நீர்
வைப்பேயெனுநிலமாமகளாம்வருத்தந்தரலா
லப்பேருலகும்புகழரங்கேசன்வரையணங்கா
முப்பேதனுளிங்கெப்பேருமக்குமொழிந்திடுமே. (92)

கேடுதிவினுதல்.

93 மருப்போடைமால்வரைகூறியமால்கடன்மல்லைவெற்பில்
விருப்போடுந்தண்புனங்காத்திருப்பீர்நிழன்மேலுருகண்
ணெருப்போடும்வாளிகுளித்தபுண்ணீரொடுநீள்பனைக்கைப்
பொருப்போடிவந்ததுகண்டதுண்டாகிற்புகலுகவே. (93)

[வேழம்வினுதலென்பது மிது.]

ஒழிந்தது வினுதல்.

94 தனைக்காவன்முப்பத்துமுத்தேவராக்குஞ்சாதனுங்கண்
மனைக்காவல்பூண்பன்மருந்திவாாமென்னமாநிலத்தே
யெனைக்காவல்பூண்டருள்காரெவ்வுளான்வெற்பிலிப்புனத்தித்
தினைக்காவலும்மைவைத்தாரென்னகாரியஞ்செய்தனரே. (94)

95 வண்டலம்பாவைத்ததேனுலைநீரெனவைத்துவண்டு
வண்டலம்பாவைப்படாதடுஞ்சோற்றைமறைப்பொருளால்
வண்டலம்பாவைப்பெறவருண்மாறன்வரைமடவீர்
வண்டலம்பாவைமனைக்குவந்தேற்குவடித்திடுமே. (95)

யாரிவரிவர்மனத்தெண்ணம்யாதெனத் தேர்தல்.

96 ஊரேதுமக்கென்பர்பேரேதுமக்கென்றுரைப்பர்கைம்மா
நேரேகணையொடும்வந்ததுண்டோவென்பர்நீரகத்தான்
காரேயனையதிருமேனிமாயன்கனவரைவா
யாரேயிவரென்பதுந்தெரியாதிவரெண்ணமுமே. (96)

எண்ணந்தெளிதல்.

97 வடிவிலையாமுத்தர்போற்றியமாயன்வடமலையோர்
கொடுவிலைமாவிலையாயுடையார்கொடுங்கூற்றமஞ்சுங்
கடுவிலையாங்கண்ணிபூண்முலைக்கீழ்நிற்பக்கண்டதொரு
நடுவிலையாமென்பராவிவர்வாய்மைநடுவிலையே. (97)

[அறிவுநாடலென்பது மிது.]

துறையுறவுணர்தன் முற்றும்.

---

## ௬௦. இருவருமுளவழியவன்வரவுணர்தல்.

௯௯. ஆய்ந்தவன்கையுறையேந்திவந்தவ்வகை
வினவுழியெதிர்மொழிவிளம்பலுமிறைவனை
நகுதலுமிருவருட்கோணுடலுமென
வுவகையுற்றவர்தாமிருவருமுளவழி
யவன்வரவுணர்தலுமூன்றென்றனரே. (௯௯.)

### கையுறையேந்திவருதல்.

98 வடத்திற்றுயின்றவடமலைவாணன்வடமலைப்பூந்
தடத்திற்குவளைவிழியுடையார்தந்தகாதனெஞ்சே
குடத்திற்றிருவிளக்காகாமனூட்டங்குறித்தவடன்
னிடத்திற்றெளிவித்துவன்பிணிதீர்தற்கிடமிதுவே. (98)

### தலைமகன் அவ்வகை வினுதல்.

99 தலையோடதனிரந்தவன்சாபந்தவிர்த்தவன்கைம்
மலையோடையினின்றழைத்தருண்மாயன்மயிலைவெற்பிற்
சிலையோடிகலுந்திருநுதலீரித்தினைப்புனத்தோர்
கலையோடிவந்ததுண்டேற்சொல்லுவீர்வன்கணையொடுமே. (99)

### எதிர்மொழிவிளம்பல்

100 சேட்டப்புயத்தண்ணலேசேறைமால்வெற்பிற்றேடிவந்த
வேட்டத்தனிக்கலைதானுண்மையாநின்னின்மேவுமெண்ணெண்
கூட்டக்கலையொடுங்கூடுவதேயன்றிக்கோதையராய்
நாட்டப்பிடிகளிடத்தணுகாதிங்குநாடலையே. (100)

### இறைவனைநகுதல்.

101 தம்மிடத்தானபலியுகந்தார்கயிலாயத்துள்ளார்
தம்மிடத்தாய்ச்சென்றுசார்வதல்லாற்றழற்காடுறுமா
னம்மிடத்தாயதெனவந்ததானகத்தக்கதொன்றோ
மெம்மிடத்தானிந்தளூர்மாயன்வெற்பசியற்கைகளே. (101)

102 விரித்துரையாய்த்தமிழ்வேதஞ்செய்மாறன்மொய்வேலைவலம்
புரித்துரையார்பொருனைக்குருகூரன்பொருப்பர்செல்வார்
தரித்துரையாடுவேர்வேட்டைவந்தார்கைத்தழைசிலையாஞ்
சிரித்துரையாடத்தகுவதொன்றோமிவர்சேவகமே. (102)

### இருவருட்கோணுடல்.

103 தினைநலம்போற்றுவதன்றிவள்காவலுஞ்சேமவில்லின்
வினைநலம்போற்றுவதன்றிவர்வேட்டையும்வேரிக்கஞ்ச
மனைநலம்போற்றியமாயோன்வதரிவரையிற்றம்மிற்
புனைநலம்போற்றுவதென்றுகண்காட்டப்புகுந்தனவே. (103)

**பாங்கி மதியுடன்பாட்டின்வகை மூன்றினுள் இறுதிநின்ற இருவருமுளவழியவன்வரவுணர்தன் முற்றும்.**

---

ந௪. விதியிருநான்கிவைமேதகுபாங்கி
மதியுடன்பாட்டிற்குவாய்ந்தவிரியே. (ந௪)

[பாங்கிமதியுடன்பாடு முற்றும்.]

---

### ௧௧. பாங்கியிற்கூட்டம்.

நரு. இரந்துபின்னிற்றல்சேட்படையென்று
மடற்கூற்றுடனேமடல்விலக்கென்று
வுடன்படன்மடற்கூற்றொழிதலென்று
குறைநயப்பித்தன்மறுத்தலென்று
கூட்டல்கூடலாயமொன்றக்
கூட்டலமைதியின்வேட்டலென்றுங்குப்
பன்னிருவகைத்தேபாங்கியிற்கூட்டம். (நரு)

**இரந்துபின்னிற்றற்குஞ் சேட்படைக்கும் உரியவை.**

ந௬. குலமகனுட்கோள்கூறலும்பாங்கி
குலமுறைகிளத்தலுங்குலமகன்கிழத்தி
தன்னையுயர்த்தலுமின்னிடைச்சேடி
விளங்காதவன்போல்வினாதலும்வேந்தன்
றலைவிதன்னிலைசாற்றலுந்தாதி
யிறைவியருமையியம்பலுமிறைவ
னின்றியமையாமையியம்பலுமிகுளை
நின்குறைநீயேசென்றுரையென்றலு
மிகுளையையிறைவனிகழ்தலுமிகுளை
காதலிமடமைகழறலுங்காதலன்

மூதறிவுடைமைமொழிதலுந்தோழி
முன்னுறுபுணர்ச்சிமுன்னத்தின்மொழிதலுந்
தன்னிலைமன்னன்சாற்றலுந்தோழி
யுலகொழுக்குணர்த்தலுந்தலைமகன்மறுத்தலுந்
தோழியஞ்சியச்சுறுத்தலும்வாழி
கையுறைபுகழ்தலுமொய்பிழைமறுத்தலு
மாற்றுநெஞ்சினோடவன்புலத்தலுமவ
ளாற்றுவித்தேகலுமாகுமைந்நான்கு
மிரந்துபின்னிற்றல்சேட்படையிரண்டிற்கு
மிரந்தனவென்பநெறியுடையோரே. (ரு௬)

குலமகனுட்கோள்கூறல்.

104 பொற்றேர்விசயன்றனக்கொருபாகெனப்போர்புரக்கு
நற்றேவனுந்திருநாங்கூரன்வெற்பினினன்னுதலீர்
குற்றேவலாய்வண்டலம்பாவைக்கில்லஞ்செய் குன்றம்பொற்கா
மற்றேவலும்வல்லனுட்கொள்வதேமங்கைமார்க்கியல்பே. (104)

பாங்கி குலமுறைகிளத்தல்.

105 விரியும்பொருநைத்துறைநாகுவீதிபின்மேய்ந்துமுத்தஞ்
சொரியும்வழுதிநன்னாட்டண்ணலேதுறையோர்பவாற்
றெரியுந்தமிழ்க்குருகூர்மகிழ்மாறன்சிலம்பிற்புன்மை
புரியுங்குறிச்சிக்கொடிச்சிக்கென்னீயன்புபூண்டதுவே. (105)

தலைவன் தலைவியை யுயர்த்திக்கூறல்.

106 தன்னையன்பானவர்தம்மைபன்பாஞ்சங்குசக்கரத்தான்
பின்னையன்பாகப்புணர்ந்திலனோபிறப்பாய்ந்துமுன்னா
ளென்னையன்பாயடிமைக்கொண்டராகவனெவ்வுள்வெற்பிற்
பொன்னையன்பாகியபுன்மையேதுபுகல்கின்றதே. (106)

107 நிலத்திற்பிறப்பிழிபென்றுலூழுப்புநிழன்மணிப்பொற்
கலத்திற்கடவுளர்கைக்கொள்வாற்கதிராழிதிண்டோள்
வலத்திற்புனைதிருமாலவ்டவேங்கடவாணர்குறக்
குலத்திற்பிறந்தவளென்பதென்னீமலர்க்கோதையையே. (107)

பாங்கி தலைவியையறியாள்போல வினுதல்.

108 பணிப்பார்பணிப்பத்தரும்பரந்தான்பரந்தாமனென்றே
கணிப்பான்றமிழ்க்குருகூர்க்காரிமாறன்கனவரைமேன்
மணிப்பாவைமன்னுயிர்பெற்றதொன்றாய்மதிப்பான்வளங்கூ
ரணிப்பாவையருண்மன்னுவெவ்வளோநின்னகத்தினளே. (108)

தலைவன் றலைவிதன்மையியம்பல்.

109 பாலானவைவெள்வளையானவைதம்மிற்பண்பிடத்தாற்
கோலாகலம்பிறிதாந்தன்மைபோற்குருகூரன்செங்கண்
மாலாதினாதன்றடரியதாம்வெற்பின்மாதர்க்கெல்லா
மேலானவள்வடிவிற்கணங்கேநிகர்வேறில்லையே. (109)

பாங்கி தலைவியருமைசாற்றல்.

110 அடியெடுத்தேழுலகன்றளந்தானடிபோற்றிவெற்றிக்
கொடியெடுத்தான்குருகூர்ச்சடகோபன்குலகிரிமே
லிடியெடுத்தாவித்திடுங்கொடியோன்வந்திறைஞ்சப்பொன்னைப்
படியெடுத்தாளையெளியளென்றோவண்ணல்பற்றியதே. (110)

தலைமகன் றலைமகளையின்றியமையாமைகூறல்.

111 ஏவவின்வாழுங்கடவுள்ர்நாதனிராமனெங்கோ
ஞவலந்தீவிலயோத்திப்பிரான்வெற்பினுன்முகத்தோன்
சாவலதாய்ச்செய்யுடலைவிட்டாற்கைக்கொளுமிருத
சீவனிகாணென்னுயிர்க்கணங்கேயித்திருமகளே. (111)

நின்குறை நீயே சென்றுரையென்றல்.

112 வேதப்பொருளின்விரிவையெல்லாமெய்த்தமிழிற்சொன்ன
போதக்கடல்வண்குருகைப்பிரான்றென்பொதியவெற்பா
கோதற்றசந்தனச்சோலையுட்கூடிக்குறித்தருணின்
காதற்குறையினைநீயேயுரையக்கரும்பினுக்கே. (112)

பாங்கியைத் தலைவன் பழித்தல்.

113 உன்னுன்முடிக்கப்படாததுன்னுமனுனையிரந்தி
தென்னுதாவிற்குறைசொன்னதான்மன்னிடவெந்தைவாழ்

நன்னாவலர்புகழ்ஞானப்பிரான்வெற்பினடியுன்னை
முன்னாதிருந்திலன்முன்னிபதேமுழுமூடமதே. (113)

பாங்கி பேதமையூட்டல்.

114 பெருத்தின்புறுமண்டர்க்கெல்லாமதுரம்பெருகுமருந்
தருத்தும்படிக்கன்புகூரன்பிலான்றனணிவரைவா
பெருத்தின்புறக்கொடைப்புன்னையெண்ணமலிடக்கிடந்து
வருத்துங்கொடிபென்னளவின்மன்னாநின்மடக்கொடியே. (114)

காதலன் முதறிவுடைமைமொழிதல்.

115 குறியாதிருவருநேர்பட்டநாட்குறிப்பிற்குறிப்பே
பிறியாதுணர்ந்தன்றநுள்செய்ததாற்பெருநீருலகிற்
சிறியார்தமையணுகாச்சேறைமாயன்சிலம்பின்மின்னே
யறியாதவளணங்கென்றுரைப்பார்க்கெய்துமப்பெயரே. (115)

116 ஓதியைக்கொற்றக்குடைக்கொண்டமாயனுறந்தையவி
ரோதியர்க்கென்றுமிருகண்ணதாம்வள்ளுவர்தமப்பா
லோதியைக்கோதற்றஞானியென்றேத்துமுலகிலைம்பா
லோதியைப்பேதைபென்றென்னீயுரைப்பதிங்கொண்ணுதலே. ()

பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

117 கூராழியங்கைப்புயல்புள்ளம்பூதங்குடிச்சிலம்பா
வாரார்களபத்துணைத்தனத்தாணின்வயத்தளென்று
லாராமத்தாருடன்சோருங்கூடிலவர்க்கதுதான்
றாராததேதிங்கபலவாலெவன்சாதிப்பதே (117)

தலைவன் றன்னிலைசாற்றல்.

118 மீகாமனின்றிக்கரையருகோடினும்வேலைபடப்
போகாதுவங்கமென்றோர்நிலையேமலர்ப்பூவைதந்த
மோகாதிகக்கடன்மோகூர்முகில்வெற்பினமொய்குழலாய்
நீகாதலித்தருள்கூர்ந்திடினீங்துவனிச்சபமே. (118)

தோழி உலகியலுரைத்தல்.

119 தெள்வார்நரம்புளர்யாழோர்பணமெனுஞ்செவ்வியதாய்க்
கள்வார்மலர்க்குழற்பொன்னைமன்னுவஞ்சக்கள்வன்றிட்ட

புள்வாய்பிளந்தபிரான்புலியூர்வெற்பிற்பூசுரர்முன்
கொள்வாய்வரைந்தினியீதேயுலகியல்கூறுகிலே. (119)

தலைமக னுலகியன்மறுத்தல்.

120 ஏவிற்சிறந்தவிழியாய்வரிவண்டிரைக்குமலர்
வாவித்திருக்குருகூர்மகிழ்மாறன்மணிவரைவாழ்
தூளிப்பெடையன்னமன்னாளையின்புறத்தோய்ந்துயிர்தான்
சீவித்திருந்தபின்பன்றோவதுவையுஞ்செய்வதுவே. (120)

பாங்கி யஞ்சியச்சுறுத்தல்.

121 கொழுங்காவியங்கண்மயிலுடன்யாழுங்குளிர்புனம்விட்
டெழுங்காலமேழ்பரித்தேர்விழுங்காலமெழுபுவியோர்
தொழுங்காரிமாறன்றுடரிவெற்பாவெமர்சூழ்வதன்முன்
பழுங்காதுநீயுமிப்போதினிலேதன்னணிநகர்க்கே. (121)

தலைமகன் கையுறைபுகழ்தல்.

122 நன்னாவலர்புகழ்கார்நறையூர்வந்தநம்பிவெற்பின்
மின்னார்மருங்குற்குமெல்லியதாய்மெல்லியன்மடவாய்
பொன்னாகவண்டழைகொண்டுவந்தேன்கண்டபோதெவரு
மன்னாதழைதழையென்றேயெதிர்கொண்டுவாங்குவரே. (122)

பாங்கி கையுறைமறுத்தல்.

123 மாகத்தவருந்தொழுமாயன்வைகுந்தைமாயன்வெற்பா
மோகத்துடன்வழிபட்டெதிர்ந்தேதந்தமொய்தழைபொன்
னாகத்தழையென்னில்வந்ததெவ்வாறெனநாடிடெமர்
வேகத்துடனேயுழுவர்மண்ணோரெங்ஙன்வேண்டுவரே. (123)

ஆற்றுநெஞ்சமோ டவன்புலந்துரைத்தல்.

124 குருந்தாமொருபெண்கொடிபொருட்டானந்துடியிருப்பாய்
வருந்தாபரத்தைக்குறைந்தநெஞ்சேமறைவாய்மையுடன்
பொருந்தாரைநீத்தபுருடையின்மாயன்பொருப்பினிழற்
றருந்தாபரத்தையுநீகுறைத்தேயெவன்சாதித்ததே. (124)

தலைவனைப் பாங்கி யாற்றுவித்தல்.

125 பையுறைநாகணைப்பாண்டவர் தூதன்மெய்ப்பாடகத்தான்
மையுறையார்தம்மனத் துறைவான்வெற்பின்மாசறுநின்
கையுறையானதென்கையுறைபாகக்கைக்கொண்டணங்கின்
மெய்யுறையாக்குவனுளையின்றேதுகவேலவனே. (125)

[இரந்து பின்னிற்றற்குஞ் சேட்படைக்கு முரிய இருபதும் முற்றும்.]

[மடற்கூற்றிற்கும் மடல் விலக்கிற்கும் உரியவை.]

நஎ. பேதையையிரந்துகுறைபெறுதுபேதுற்றோன்
மடலினிப்பொருளெனமனக்கோடலுமதைக்
கடனெனவுலகின்மேல்வைத்துக்கழறலுந்
தன்மேல்வைத்திகுளைக்குச்சாற்றலுந்
தலைமகளவயவத்தருமைசாற்றலுந்
தலைமகன் றன்னைத்தானேபுகழ்தலு
மெழுதுமுன்னிரங்கலுமெழுதியிரங்கலுங்
கெழுதகைப்பாங்கியருணிலைகிளத்தலுங்
கொண்டுநிலைகூறலுமென் றிவையொன்பது
மடற்கூற்றிற்குமடல்விலக்கிற்குந்
திடப்படமொழிவர்தெளிவுடையோரே. (நஎ)

மடலேபொருளெனமதித்தல்.

126 அரும்பாரம்பருவமுலைமடவார்தந்தவாசையென்னுங்
கரும்பாம்பிணைவெல்லுமுழலிநெஞ்சேகடுங்காலினெடும்
பொரும்பாம்பணைப்புயல்புல்லாணிமாயன்பொருப்பயல்வா
ழிரும்பாம்பனைமடலன்றியுண்டோபிறிதெண்ணுதற்கே. (126)

அதனை யுலகின்மேல்வைத்துரைத்தல்.

127 நன்மருந்தானதைவானோர்க்கருள்புயனுகைவெற்பிற்
சொன்மருந்தானவராற் றுன்பமேயினர் தூநகையாய்
பன்மருந்தாய்வதிற்சான்றோர்விதித்தபனைமடலே
புன்மருந்தாயினுநன்மருந்தாக்கொள்வர்போந்ததென்றே. (127)

128 அலைபாய்ந்ததெண்கடற்பார்மேன்மகளிர்மார்விழியாங்
கலைபாய்ந்தறிவிழந்தாரணங்கேமறைகாட்டுமுண்மைத்
தொலைபாய்ந்தவர்புகழ்சீமத்துவாரகைத்தோன்றலொண்பொன்
மலைபாய்ந்திழிவர்கிழிபிடித்தேறுவர்மாமடலே. (128)

அதனைத் தன்மேல்வைத்துச்சாற்றல்.

129 வேளையும்பார்த்தின்றுசேவித்துவாழ்ந்தபின்வேங்கடத்தார்
தோளையுந்தாளையும்போற்றியமாறன்றுடரியுள்ளீர்
பூளையுமென்பும்புனைவதனோடும்புனைமடன்மே
ஞளையென்கோலமுஞ்சிலமும்பார்த்துநகைத்திருமே. (129)

130 பாங்கி தலைமகளவயவத்தருமை சாற்றல்.

விழியிற்புலனுங்கருத்துநின்போதமுமின்னைக்கண்ட
வழியிற்பிரிந்தறைபோயிற்றென்றுன்மறைவாழ்த்துமுண்மை
மொழியிற்குடிகொண்டருள்காளமேகந்தென்மோகைவெற்பா
கிழியிற்பொறியைப்பொறியோபொறிக்குங்கிழமையவே. (130)

தலைமகன் றன்னைத் தானே புகழ்தல்.

131 ஆயுஞ்சுருதிப்பொருள்யாவுமேட்டினகத்தெழுதத்
தோயும்படிக்குத்தமிழ்செய்தமாறன்சுரும்பிலென்னெஞ்
சேயுந்திருவினைத்தூரியக்கோல்கொண்டெழுதிப்பத்தி
பாயுந்தடத்திற்படத்திலொன்றும்வகைபாலிப்பனே. (131)

எழுதுமுன்னிரங்கல்.

132 அறமெனத்தோன்றுங்கயிலாயமன்றன்றழகர்வெற்பிற்
பிறமனைமாதர்க்கெல்லாந்தெய்வமாமொருபெண்பொருட்டான்
மறமனம்பூண்டறமாலானயான்கருமைவழித்த
புறமனையிற்பித்தனேபுக்கதேதுபுகலுகவே. (132)

இறைவ னிறைவியைக் கிழியிலெழுதி யிரங்கல்.

133 பாடலுள்ளாரன்றுபொய்யாமொழிபுனைபாவித்துண்மை
கூடலுள்ளார்முன்புரைத்திலரோகுருகூரன்விண்ணோர்
நாடலுள்ளான்வெற்பிலோவியமேகிழிநாட்டுமென்பா
லூடலுள்ளாயல்லையொன்றுரையாததென்னூழ்வினையே. (133)

அருணிலைகிளத்தல்.

134 கொல்லாவிரதமழித்தார்க்கிடும்பைதுறித்திடினுட்
செல்லாதுபிற்பகலெய்துமென்றுற்சிலம்பாதிருமால்
புல்லாணியில்வளர்புல்லாகிபவன்றில்போகமெய்து
மில்லானதைக்குறைத்தாலெய்துமோவருளின்பமுமே. (134)

135 கோலத்திருவுருக்கொண்டுதராதலக்கோதையையோர்
வாலப்பிறைமருப்பிற்கொண்டமால்வரமங்கைவெற்பா
ஞாலத்தொருகுலப்பெண்ணினைவேட்டுநடுவறவோர்
தாலக்குலப்பெண்ணையேதுறைத்தானன்றுன்றண்ணளியே. ()

கொண்டுநிலைகூறல்.

136 ஆசியென்றலருண்மாலன்பில்வாழ்பெண்ணரசைநின்பா
னேசியென்றுற்றுறைநேர்ந்திலளாகில்வெண்ணீறுமெய்க்கே
பூசியென்றாகிலுநீகிழிமீதுபனைந்தெழுதி
வாசியென்றும்பனைமாமடலேறுகமன்னவனே. (136)

[மடற்கூற்றிற்கும் மடல்விலக்கிற்கு முரிய வொன்பதும் முற்றும்.]

[உடன்படலுடன் மடற்கூற்றேழ்தற் குரியவை.]

௩அ. இளமைத்தன்மையிகுளைசெப்பலுமவள்
வளமைத்தன்மைவருத்தியதுணர்த்தலுஞ்
செவ்வியருமைசெப்பலுந்தலைமகன்
செவ்வியெளிமைசெப்பியபின்ன
ரென்னைமறைப்பினெளிதெனநகுதலு
மந்நகைபொறுதுவருந்தலுமன்னனைத்
தெளித்தலுங்கையுறையளித்ததையேற்றலுங்
களித்தவனுரைப்பதொடுகருதியவொன்பது
முடன்படலுடன்மடற்கூற்றொழிதற்கு
முடன்படுமென்பருரனுடையோரே, (௩அ)

தலைவி யிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.

137 தேக்கியசெஞ்சொற்றமிழ்மாறன்வெற்பிற்றிருமுகமென்
றாக்கியபுண்டரிகத்தைக்கண்டேபுண்டரிகமெல்லாந்
தாக்கிடபுன்மையொன்றின்றலதற்குத்தளர்ந்துசெவ்வி
போக்கியதென்னின்முகபுண்டரீகம்புரவலனே. (137)

138 பூரித்திலபொன்மலைபோன்முலைமொழிபுத்தமுதம்
பாரித்திலகண்களவறியாதெழுபார்புகழ்சேர்
வாரித்தலசயனத்துறைவார்கடன்மல்லையிலிந்
நாரிக்குணைந்தென்கொனண்பாதிருவுளநைகின்றதே. (138)

தலைவி வளமைத்தன்மை வருத்தியதுணர்த்தல்.

139 உருவத்திலானந்தமொன்றுதருவத்திலொன்றுமென்பார்
வெருவத்தமிழ்செய்தசண்பகமாறன்றன்வெற்பின்றலை
யுருவப்பரிமளிக்கும்பைந்துழாயன்னவொண்ணுதலைப்
பருவத்திளைபளென்றென்னீயுரைப்பதுபைந்தொடியே. (139)

சேவ்வியருமைசேப்பல்.

140 துப்புரவானதுகண்டுயில்போலத்துறந்தது தூட்
கப்புரவாசமறந்ததுபூண்முலைகல்விச்செல்வத்
தொப்புரவாளர்புகழ்மாயனூரகத்தோங்கலினந்
தப்புரவாணகைக்கன்பாயெவன்சொல்லிபாற்றுவனே. (140)

சேவ்வியேளிமை சேப்பல்.

141 கழைமுகத்தாவின்னிசைகண்டமாயன்கமலைக்கன்பு
தழைமுகத்தான்புகழ்த்தஞ்சைவெற்பார்நந்தலைவரென்றாற்
குழைமுகத்தாளென்பதேயுண்மையாய்ச்செம்பொற்கொம்பணங்கே
மழைபூகத்தாவித்தெழும்பயிர்போலவனப்பெய்துமே. (141)

என்னைமறைப்பி னெளிதென நகுதல்.

142 சிறைத்தாரைநேமிபச்சிற்செறித்தாலுஞ்சிற்றுணிதன்னைக்
குறைத்தாலவ்வீரதஞ்செல்லுமோகொடுங்கூற்றைவென்ற
கறைத்தாரைவேல்விழிநன்காமரதமுங்காணிலென்னை
மறைத்தாவியல்வதன்றுமல்லைமால்வெற்பின்மன்னவனே. (142)

அங்நகைபோறு தவன்புலம்பல்

143 மஞ்சூட்டுமென்குழலாய்குருகூர்மகிழ்மாறன்வெற்பிற்
பஞ்சூட்டியமலர்ச்சீரடியாள்விழிப்பார்வைபதாம்
வெஞ்சூட்டுவல்விலங்காற்றுயர்கூர்ந்தவிழுப்புண்டன்னி
னஞ்சூட்டினர்செய்கையாமுனதாயநகைத்துரையே. (143)

பாங்கி தலைமகனைத் தேற்றல்.

144 விண்ணியல்பாகப்புகழ்வடமீனும்விரும்பத்தக்க
பெண்ணியலாளென்னில்வேறல்லளாற்பெருநீருலகிற்
புண்ணியர்போற்றும்புருடோத்தமன்வண்புநடையினீ
யெண்ணியவாறெய்தலாம்வருந்தேலென்னிறையவனே. (144)

### பாங்கி கையுறையேற்றல்.

145 இத்தழைவாசமிழந்தபுராதனமென்றனள்வா
சத்தழைவேறுகொய்யாடைக்கென்றுளவ்வுரை துணையாய்க்
கைத்தழைகோவியர்க்கிந்தபிரான்கச்சிவெற்பநின்பான்
மெய்த்தழையேற்பதற்கிதேநற்காலம்விரைந்தருளே. (145)

### கிழவோனாற்றல்.

146 தேங்கியதண்பொருநைக்குருகூரன்சிலம்பிற்குன்றுப்
பாங்கியர்நாயகங்கையுறையாமெனும்பைந்தழையே
வாங்கியதாலினிவாங்காதுவேள்கைவரிசிலைநோய்
நீங்கியதாலினிநீங்காதனவென்னிறைபொறையே. (146)

147 மெய்க்கொண்டல்கோதருஞானப்பிரானிடவெந்தைவெற்பின்
மைக்கொண்டல்போலுமலர்க்குழலாள்சந்தவண்டழையோ
கைக்கொண்டனளென்னுயிர்கலங்காமற்கருணையுட
னுய்க்கொண்டதொன்றல்லவோவுண்மையாகவுரைத்திடிலே. ()

[உடன்படலுடன் மடற்கூற்றொழிதற்குடம்படலொன்பதும் முற்றும்.]

[மெலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்கும் வலிதாகக்கூறி
மறுத்தற்கும் உரியவை.]

௫௯. குரிசிற்கின்புறக்குறைநேர்பாங்கி
அரிமதர்விழியாட்கவன்குறையுணர்த்தலு
மறியாள்போன்றவள்குறியாதுகூறலு
மிறையோற்கண்டமையிகுளையியம்பலு
மிகுளையறியாதிறைவிமறைத்தலு
மென்னைமறைப்பதென்னெனத்தழாஅலுங்
கையுறைபுகழ்தலொடுமெய்பெறவாறு
மெலிதாகச்சொல்லிக்குறைநயப்பித்தற்கும்
வலிதாகக்கூறிமறுத்தற்குமுரித்தே. (௫௯)

### பாங்கி யரிமதர்விழியாட் கவன்குறையுணர்த்தல்.

148 கருமாமுகில்வண்ணன்கண்ணன்விண்ணோரெண்கவித்தலத்தெந்
திருமால்சிலம்பினிற்கைத்தழையாணொருசெம்மலெம்முன்
வருமாதாவினன்மின்னேயுரைக்கிலன்மாற்றமந்தப்
பெருமான்றனக்கினியென்னுஞ்செயத்தகும்பெற்றியதே. (148)

அறியாள்போன்றவள் குறியாதுகூறல்.

149 மறைப்பான்மையைச்செந்தமிழ்செய்தமாறன்வரையிற்கொம்பர்
பிறைப்பாலுழமருந்துக்கதுபாய்ந்துபிரசமல்குஞ்
சிறைப்பானலஞ்சுனையுள்ளாயதனைத்தெவிட்டப்பெறு
நறைப்பாற்சடலெனவைத்தனன்பார்க்கின்பநன்னுதலே.(149)

பாங்கி யிறையோற்கண்டமை பகர்தல்

150 ஆளரியாந்திருவேளுக்கைகமாயனணிவரைவாய்
நீளரிக்கிண்கிணிப்பாதாரவிந்தமின்னேரிடைநின்
வாளரிக்கண்வலைப்பட்டுநம்வண்டலில்வைகுமொரு
கோளரியேறனையானைக்கண்டேன்கண்குளிர்ந்திடவே. (150)

பாங்கியைத் தலைவி மறைத்தல்.

151 பாட்டாற்பரனைப்பயின்மாறன்முத்தர்பயில்வழுதி
நாட்டான்வரையினறுந்தழையேந்திநமதுநலம்
வேட்டார்புனம்விட்டகலாரெனச்சொல்லும்வெவ்வுரைதான்
சேட்டார்ப்பிணிக்குந்தருவதொன்றோமென்கிளிமொழியே. ()

பாங்கி யென்னைமறைப்ப தென்னெனத் தழாஅல்.

152 கூண்டுகொண்டார்நம்மிற்கூடாதசெவ்விகுறித்தடிக்கீழ்ப்
பூண்டுகொண்டாலும்புலப்படுத்தாய்புளிமீதிலெம்மை
யாண்டுகொண்டான்றென்னரங்கேசன்வெற்பிலரியதுன்பந்
தூண்டுகின்றாயின்பம்வேண்டுகின்றாரொடுந்தூமொழியே. (152)

153 உம்மைப்பிறப்பிற்புதைத்தகுன்றாப்பொருளுழ்வெளியிட்
டிம்மைப்பிறப்பிலெடுப்பவர்தாமிருகண்ணுங்கையுஞ்
செம்மைப்படாமன்மறைப்பதுபோலுநின்செய்கைமெய்தோய்
மும்மைத்தமிழ்க்குருகூர்மாறன்வெற்பின்முகிணைகையே. (153)

பாங்கி கையுறைபுகழ்தல்.

154 பையடையாளப்பணிப்பாயற்பாண்டவர்தூதன்விண்மேன்
மையடையசம்பொழிற்பாடகத்தான்வெற்பின்மானனையாய்
பொய்யடையாளமருங்குலுக்கேற்பப்பொருப்பனன்பாற்
கையடையாகத்தருந்தழைவாடக்கடனல்லவே. (154)

[மெலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்கும்
வலிதாகக்கூறி மறுத்தற்கும் உரிய ஆறும் மூற்றும்.]

[வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்கும்
மேலிதாகச்சொல்லி மேவற்கும் உரியவை]

௬0. பாங்கியிறைவன்பருவரலுணர்த்தலு
மறுத்தற்கருமைவழங்கலுமுரவோ
னுள்ளம்வேறுதலையுள்ளியுரைத்தலுந்
தலைவியைமுனிதலுந்தலைவிபாங்கியை
வெய்துறமுனிதலுங்கையுறையேற்றலும்
வலிதாகச்சொல்லிக்குறைநயப்பித்தற்கு
மெலிதாகச்சொல்லிமேவற்குமுரிய. (௬0)

பாங்கி யிறைவன் பருவரலுணர்த்தல்.

155 ஓடைக்கயலைக்கொணர்ந்தோதிமமந்தவோடைமலர்ப்
பேடைக்கருத்தித்துயில்வகண்டேகண்ணன்பேரமுந்நீ
ராடைப்புவிபுகழாண்டகைவாடியடைந்ததுன்பக்
கோடைக்கருண்மழையென்றேவுதவுமென்கோமளமே. (155)

தலைமகனை மறுத்தற்கருமை வழங்கல்.

156 கருத்துங்குழையுமன்கையுங்குழையுங்கண்ணுங்குழையும்
பொருத்தும்படிக்கருட்பார்வைசெய்வாய்கண்டபோதினிற்போய்
வருத்தும்படிக்குரைத்தேனெடுமாயன்வதரிவெற்பிற்
றிருத்தும்படிற்றுரைகாணேனினிபந்தச்செம்மலையே. (156)

உரவோனுள்ளம்வேறுதலை யுள்ளியுணர்த்தல்.

157 கற்புடையார்கற்பினீர்மையெல்லாங்கடுங்காமவெந்தீப்
பொற்புடையார்முன்புலருமென்றூர்குடைபோற்றிக்கொண்ட
வெற்புடையாரெங்கள்செந்தாமரைக்கண்ணர்வெள்ளறைவா
ழற்புடையார்கருத்தேதோவறிகிலனாயிழையே. (157)

தோழி தலைவியை முனிதல்.

158 பழுதென்பதுசற்றுமெய்தாமன்மந்திரம்பத்தும்பத்தாய்த்
தொழுதின்புறத்துணிவாருடன்சூழ்கநின்சூழ்ச்சிவிண்ணோர்
முழுதும்புகழ்திருமோகூரான்வெற்பினின்மொய்குழல்யான்
வழுவும்படிசொன்னதெல்லாமனத்தின்மறந்தருளே. (158)

தலைவி பாங்கியை முனிதல்.

159 விண்ணுதரிப்பவருமாரமுதைவிண்ணோர்கண்மலர்ப்
பெண்ணாருதுய்ப்பவுண்டதல்லாற்கடற்போமுதன்
றுண்ணுதவர்க்கருளென்றதுண்டோவுறையூரன்கஞ்சக்
கண்ணன்வரையிலென்கண்ணுகுநீயென்கழறுவதே. (159)

160 குறையிரப்பார்க்குக்குறைமுடிப்பார்தங்குறிப்பினன்றி
மறையிரப்பார்க்கும்வெளிப்படுத்தாரென்னும்வாய்மையுரு
ரிறையிரப்பானதைத்திரலங்காரரினியமுத்தித்
துறையிரப்பார்க்கருள்கூர்சோலைமாமலைத்தோகையரே. (160)

கையுறை யேற்றல்.

161 நண்ணுரைவெண்கண்டநேமிப்பிரான்றிருநாகைவெற்பிற்
றண்ணார்பொன்னகைத்தழையிருதோளெனச்சார்சுரும்பின்
கண்ணார்ந்தழையுடனனஞ்சேர்தழைகச்சறக்கூர்ந்
தண்ணாந்தெழுஞ்சந்தனத்தழையாகியதற்புதமே. (161)

[வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்கும் மெலிதாகச்சொல்லி
மேவற்கும் உரிய ஆறும் முற்றும்.]

[கூட்டன்முதலா வேட்டலீறன நான்கிற்றும் உரியவை.]

சுக. கற்புடைத்தையல்கையுறையேற்றமை
கொற்றவற்கிருளைகுறிப்புறநிகழ்த்தலுங்
குறியிடங்கூறலுங்கொண்டுசேறலு
மிடத்துய்த்துநீங்கலுமிறையெதிர்ப்படுதலும்
புணர்தலும்புகழ்தலும்புனைந்துறவிடுத்தலு
மிணர்கொடுபாங்கிமெல்லியலைச்சார்ந்து
கையுறைகாட்டலும்பாங்கிற்கூட்டலும்
பையரவல்குலைநீங்கிப்பார்த்திபற்
கோம்படைசாற்றலுமுலகியலாம்படி
விருந்துவிலக்கலும்விருந்திறைமருந்தென்
றருந்தலுமாகியறைந்தபன்மூன்றுங்
கூட்டல்வேட்டன்முதலீறாக
விருளைக்குவிதித்தவீரிரண்டிற்குமுரிய. (சுக)

### கற்புடைத்தையல் கையுறையேற்றமை கோற்றவற் கிதுளை குறிப்புற நிகழ்த்தல்.

162 குழைக்காதர்பேரைவெற்பாவின்றுநீயென்கைக்கொய்து தந்த
தழைக்காதாவினைபேசூசொல்வேன்செங்கைத்தாமரைமே
லுழைக்காதாவியகண்ணிகொண்டாள்கொண்டுகந்ததற்பின்
கழைக்காதாமதனூலதனுன்மெய்க்கக்கண்டனனே. (162)

### பாங்கி தலைமகற்குக் குறியிடங்கூறல்.

163 அருண்மேருவாங்கண்ணமங்கையுள்ளான்பத்தாவிவெற்பிற்
கருமேகமுற்றிபசந்தனக்காவொன்றுகாமர்விண்ணோர்
தருமேயதுநள்ளிடைமன்னனேயிந்தத்தையல்செய்ய
திருமேனிபோன்றிருள்சீக்குஞ்செங்காந்தட்டிருவிளக்கே. (163)

### பாங்கி குறியிடத் திறைவியைக் கொண்டுசேறல்.

164 வளையாழியங்கைப்புயல்வானமாமலைவாழ்த்திவிண்ணோர்
கிளையாதரிக்கும்வரமங்கைவாணன்கிரிக்கெதிர்கூ
யிளையாரொடுந்தழைகொய்துமென்பூக்கொய்திருஞ்சுனைநீர்
விளையாடுதற்கங்கெழுகசெந்தாமரைமெல்லியலே. (164)

### தலைமகளை யிடத்துய்த்துநீக்கல்.

165 பருமாமணிப்பணிப்பாயலின்மேலன்பிற்பள்ளிகொண்ட
பெருமாள்கனவரைப்பெண்ணமுதேமைப்பிழம்பிற்பெய்வான்
திருமாமலர்கொணர்கேனவண்சேறலைசேறிற்கன்றுங்
கருமாமணியுறப்பஞ்சூட்டியமென்கமலங்களே. (165)

### இறைவியை யிறையோ னிடத்தெதிர்ப்படுதல்.

166 அன்னங்கொடியெனவேகொண்டமாறனணிவரைமேன்
மின்னங்கொடியவிடும்பையுறுதிருமேருவினோர்
பொன்னங்கொடிநடைகற்றனவாலெனைப்போலுமண்மேன்
முன்னங்கொடிவில்பெருந்தவம்யாவர்முயன்றவரே. (166)

167 கொந்தார்பொழிற்குருகூர்மாயன்வெற்பிற்குலக்கொழுந்தே
நொந்தானிவனென்றருள்செய்யவோநுண்ணிடைவருந்தப்
பந்தாடலுங்கழங்காடலுநீத்துயிர்ப்பாங்கியின்றி
மந்தாநிலந்தவழ்சந்தாடவித்தமிவந்ததுவே. (167)

### புணர்ச்சியின் மகிழ்தல்.

168 அருமாகடலமுதாமெம்பிரானம்புயாசனப்பூந்
திருமால்சிறுபுலியூர்ப்பெருமானொடுஞ்சேர்தொறுமிங்
கொருநாளினுக்கொருநாளருண்மாயனையோகித்துற்றார்
பெருநாளுஞ்சென்றெய்தினர்நாளுநேர்வரும்பேரின்பமே. (168)

### புகழ்தல்.

169 மறைத்திறைவாய்மைவழுவலுற்றார்பொய்யைமாற்றியுண்மைத்
துறைத்திறைகொண்டதமிழ்மகிழ்மாறன்சுரும்பிவின்ப
நிறைத்திறைப்போதகன்றுலெழுங்காமநெருப்பைமின்னே
யிறைத்திறைத்தாற்றமிர்தக்கடலநின்னிலவிதழே. (169)

### தலைமகளைத் தலைமகன் விடுத்தல்.

170 நிலத்தாரமுதொருபெண்ணுருவாயநிலைமைத்தென்று
சொலத்தானுதித்ததுடியிடையாய்சுடராழியங்கை
வலத்தாரொளிர்சங்கிடத்தார்திருவல்லவாழ்வரைத்தொல்
குலத்தாயமின்புறநின்னுயிர்ப்பாங்கியைக்கூடுகவே. (170)

### பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

171 மதுவொழுகுந்தண்டுழாய்மால்வடமலைவாழுமின்னே
யதுபொழுதாவியினுண்மலராயதமர்விழிகண்
டிதுபொழுதீங்கரும்பாயதிந்தீவரமின்புறக்காண்
கதுமெனத்தாழ்குழற்கேபுனைபோதுட்களித்தருளே. (171)

### பாங்கி தலைவியைப் பாங்கிற்கூட்டல்.

172 தனைநான்புகழவடிமைக்கொண்மாறன்றமிழ்ப்பொதியச்
சுனைநாண்மலர்பலகொய்ததனோடும்வெண்டோட்டுமுல்லை
நனைநாண்மலர்நின்புனைகுழன்மீதுநறுநுதலாய்
புனைநான்மகிழும்படிக்கினியாயம்பொருந்துகவே. (172)

### பாங்கி தலைவியைநீங்கித் தலைவனோ டோம்படைசாற்றல்.

173 சுரும்பார்மலர்க்குழலாள்பொருட்டாகத்தொடர்புடைநீ
பெரும்பான்மையிற்சொன்னசூழ்ச்சியெல்லாமடப்பேதமையேன்

விரும்பாதெதிர்சொன்னவைமறந்தேயருள்வேலைமண்மேல்
வரும்பாவலர்தம்பிரானெம்பிரான்றன்வரையண்ணலே. (173)

பாங்கி விருந்துவிலக்கல்.

171 மாலைப்பொழுதிலழகர்தென்சோலைமலையின்மரைம்
பாலைப்பசுந்தினைமூரலளாய்ப்பசிதீர்ந்துகங்குற்
சோலைத்தழைபெய்தவெம்மூர்க்குரம்பையுட்டுஞ்சியெழு
காலைக்குறும்பழியாதோநினக்குரைகாவலனே. (174)

விருந்திறைவிரும்பல்.

175 திருந்தாதபுன்சமயக்குறும்போடத்திருப்புளிக்கீ
ழிருந்தாரணத்தமிழ்செய்தருண்மாறனெழில்வரைவாய்
விருந்தாயெனக்கிங்களிப்பனயாவும்விண்ணோருந்து
மருந்தானதிலும்புனிதமொன்றாமின்பவாணுதலே. (175)

[கூட்டன்முதலா வேட்டலீறான நான்கிற்குமுரிய பதின்மூன்றும் முற்றும்.]

சஉ. அழகுறவுணர்த்துமிவ்வறுபான்மூன்றுங்
குழகமர்பாங்கியிற்கூட்டத்துவிரியே. (சஉ)

பாங்கியிற்கூட்டம் முற்றும்.

---

கஉ. பகற்குறி.

சங. பழுதறக்கூட்டல்கூடல்பாங்கின்
விழுமிதிற்கூட்டல்வேட்டலென்று
வழுவில்பகற்குறிவகைநான்கென்ப. (சங)

சச. முற்றிழைகுறியிடங்கூறன்முதலாக்
கொற்றவன்விருந்துகைக்கோடலீறாப்
பகர்ந்தபன்னிரண்டும்பகற்குறிவிரியே. (சச)

ஒருசார் பகற்குறி.

சரு. புல்லென்றிரக்கல்வன்புறைசெறிப்புணர்த்தலென்
றொல்லுதன்மூவகைத்தொருசார்பகற்குறி. (சரு)

௪௬. பூங்கொடிமாலையம்பொழுதுகண்டிரங்கலும்
பாங்கிபுலம்பலும்பார்த்திபனீடக்
காரிகைவருந்தலும்பாங்கிகழறலும்
மொய்குழன்முன்னிலைப்புறமொழிமொழிதலும்
பையரவல்குல்பாங்கியொடுபகர்தலும்
பாங்கியச்சுறுத்தலுநீங்கற்கருமை
யிறைவிநினைந்திரங்கலுமிறைவிக்கவன்வரல்
பிறைநுதற்பாங்கியுரைத்தபின்பெயர்த்துஞ்
சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தலு
முன்னிலைப்புறமொழிபாங்கிமொழிதலு
முன்னின்றுணர்த்தலுமோம்படைமொழிதலுந்
தளர்ந்தநெஞ்சமொடுதஞ்சம்பெறாது
விளம்பலீரேழொருசார்பகற்குறிவிரி. (௪௬)

பூங்கோடி மாலையம்பொழுதுகண்டிரங்கல்

176 சொன்மாலையாற்புலவீரலர்மேன்மங்கைதோள்பிரியா
நன்மாலைபேத்துமெனப்பகர்மாறன்றனன்கிரிமே
லென்மாலையார்க்கும்பகர்வரிதாக்கியவிந்தவந்திப்
புன்மாலையிற்றுணையைப்பிசியாதிரும்புள்ளிளமே (176)

177 காற்றினைத்தாதையெனவுடையான்மைக்கடலினைச்சிற்
றூற்றினைப்போற்கடந்தான்றொழுமாயனயோத்திவெற்பிற்
சேற்றினைத்தோய்கெப்தலுண்கணல்லார்செறுபோழ்தினிலோர்
கூற்றினைமாலையென்பார்பிரிந்தாரிற்கொடியவரே. (177)

மாலையம்பொழுதுகண்டு பாங்கிபுலம்பல்.

178 இருள்காட்டிரண்பகலெற்பாடுகாட்டிபிவண்மதிக்கு
மருள்காட்டியநஞ்சவஞ்சகராகுவைமாலையென்பா
ரருள்காட்டியதென்னரங்கேசன்வெற்பிலணங்கிற்கின்பப்
பொருள்காட்டிநீங்கியவன்மையரோடொன்றும்புன்மையரே. ()

179 தண்ணென்றசெஞ்சுடர்மேனிபிறைற்றன்னைவென்றதுநீ இ
வண்ணங்கரியளெனச்செய்யவேண்டியுமாறன்வெற்பிற்
கண்ணின்றெழுமிம்மருண்மாலைகாதலர்நீங்கியமா
துண்ணின்றுடற்றவும்வெய்யோன்கடல்புக்கொளித்தனனே. ()

### தலைவ னீடத் தலைவிவருந்தல்.

180 தாதார்நறுமலர்கொய்வதற்காயத்தவர்தணந்த
போதார்வழற்றிங்கணைந்திலரேபுயபூதரம்பூ
மாதானவட்கருள்வைகுந்தைமாயன்வரையினின்மே
லேதாவதென்னுறுப்பேதாமினியென்னெழினலமே. (180)

### தலைவியைப் பாங்கி கழறல்.

181 மூப்பாரிளமையடைந்தார்நிரப்பினர்மும்மைச்செல்வம்
பூப்பாரெனநினையாதவர்போற்பொரும்போரிலைவர்
தேர்ப்பாகனானவர்தென்னரங்கேசர்சிலம்பர்நின்னை
நீப்பாரெனநினையாப்புன்மையேதின்பநேரிழையே. (181)

### மொய்குழன் முன்னிலைப்புறமொழி மொழிதல்.

182 உலகத்தொருசொலில்லாதவர்யாரென்பதுற்றுமுற்றூற்
பலகற்றவருமினைவதெண்ணூரென்பபாசடைத்தே
மலர்பெற்றசெந்திருவாழ்மார்பர்வண்பரிசாரத்துள்ளாங்
கலகத்தவர்கட்டுரைக்கினியேதுகழறுவதே. (182)

### தலைவி பாங்கியோடுபகர்தல்.

183 ஊணுந்துயிலுந்துறப்பித்தகாதலரும்பரிம்பர்ச்
சேணுந்துறந்திருந்தாலுமென்னுமன்பர்சென்னியின்மேற்
பூணும்பதாம்புயத்தார்புருடேசர்பொருப்பிலென்கண்
காணும்படிக்கஞ்சனமெய்துமாகிற்கனங்குழையே, (183)

### பாங்கி யச்சுறுத்தல்.

184 வானவர்போற்றுந்திருத்தேவனார்தொகைமாயன்வெற்பி
லெனவில்வீழ்கிள்ளையோட்டாதுபையுட்கிடங்கொடுக்கிற்
கானவரெய்துவரன்னையுநாடிவள்காவலும்போம்
போனவர்தம்மையிங்கென்னனீபின்னைப்புல்குவதே. (184)

### தலைவி நீங்கழ்கருமைநினைந் திரங்கல்.

185 கயத்தாமரைக்கணைத்தாளானெகிழ்த்தகருத்தையுள்ளப்
பயத்தாற்பிணிக்குமகன்றில்கண்டேன்மறைப்பாடல்சொன்ன
மயத்தாற்றமிழ்செய்தசெண்பகமாறன்வரையிலெம்மை
யயர்த்தாரைவிட்டித்துணைப்போதிருந்ததுமற்புதமே, (185)

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

186 என்கண்செவிநின்செவிகண்ணினிநம்மிதயமெல்லாம்
புன்கண்டவிர்ந்திங்கிதரதம்பாலிப்பப்போதமில்லா
வன்கண்மையர்க்கருளாமாயனன்பில்வளைமூரல்வா
ளுன்கண்ணருள்வைத்திரதமொன்றேடன்பருற்றனரே. (186)

சிறைப்புறமாகத் தலைவற்குச் செறிப்பறிவுறுத்தல்.

187 பொறிப்பார்பொறிக்கப்படாமறைநாலும்பொதிந்தபொருட்
குறிப்பாற்றமிழ்செய்குருகைப்பிரான்வெற்பிற்கோகிலமே
பறிப்பார்தினைப்பறித்தானமர்நாளைப்பரிந்தெமையிற்
செறிப்பார்செறித்தபின்பேதோவிறைவர்திருவுளமே. (187)

முன்னிலைப்புறமொழியா லிற்செறிப்புணர்த்தல்.

188 எனைத்தாளிணையிலடிமைக்கொண்மாறனெழிற்றடரித்
தினைத்தாளில்வைகுஞ்சிறுகிளிகாளொருசெம்மல்கஞ்ச
மனைத்தாழ்குழல்சென்றனளோவெனிலுயிர்வைத்துமனத்
துனைத்தானினைந்துடல்கொண்டேகினளென்றுரைசெய்யுமே. ()

பாங்கி தலைவன்முன்னின் றிற்செறிப்புணர்த்தல்.

189 வனத்துளவேங்கைவெறுத்தால்வறுங்களமானதினைப்
புனத்துளமானவண்வைகுங்கொல்லோபொரும்போரவுணர்ச்
சினத்துளவாளரிவாழ்சிங்கவேள்குன்றஞ்சேர்ந்தினியெம்
மினத்துளவாவருள்சீறார்க்கெழுகுமிறைபவனே. (189)

பாங்கி தலைமகன்முன்னின்று செறிப்பறிவுறுத்தி யோம்படைசாற்றல்.

190 பெபல்பெற்றகாலத்தெமர்வித்துமேனற்பெருவளங்கொய்
தயல்பெற்றவரொடுமேகுதும்யாஞ்சந்தனடவிசூழ்
வயல்பெற்றவைகுந்தைவிண்ணகர்மாயன்வரையினன்னீர்க்
கயல்பெற்றகண்ணிதன்னட்பிகழாதருள்காவலனே. (190)

(கிழவோன்) தஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்.

191 கிளைத்திட்டகொம்புடன்கண்ணிவைத்தேயிக்கிளர்கணியார்
தளைத்திட்டமான்றனைத்தப்பவிட்டார்சரத்தான்மரமேழ்
துளைத்திட்டமால்வண்டுவராபதிவெற்பிற்றேய்ந்துபின்போ
யிளைத்திட்டவென்னெஞ்சமோபின்னைமீட்பதவ்வேழையையே.

ஒருசார்பகற்குறி முற்றும்.

## கசு. பகற்குறியிடையீடு.

சஎ. தேர்ந்துவிலக்கல்சேறல்கலக்கமென்
றேய்ந்தமூவகைத்தேபகற்குறியிடையீடு. (சஎ)

சஅ. மன்னனைக்குறிவரல்விலக்கலுமின்னிடைக்
கோதையைப்பாங்கிகுறிவரல்விலக்கலு
மாடிடநோக்கியாயிழையயர்தலு
மாடிடம்விடுத்துக்கொண்டகறலும்பின்ன
ணீடுநினைந்திரங்கலுநிறைபொறைவழுவா
வண்ணல்வறுங்களநண்ணிமறுகலு
மொண்ணுதல்வாழூரினைநோக்கி
மதிமயங்கலுமெனவகுத்தவோரேழும்
விதிமுறைப்பகற்குறியிடையீட்டுவிரியே. (சஅ)

### மன்னனைப் பாங்கி குறிவரல்விலக்கல்.

192 கானுர்புனத்துட்பசுந்தினையாவுங்கதிர்மடல்விண்
டனுதிராது பைங்கிள்ளையும்வீழுமெண்ணெண்கலைதேர்
ஞானுதிகர்புகழ்நாங்கூரன்வெற்பநகைத்தனளா
யானுதணங்கையுற்றன்னையுநோக்குமடிக்கடியே. (192)

### பாங்கி யிறைவியைக் குறிவரல்விலக்கல்.

193 முகைக்கின்றகோங்கரும்பாமுலைபூரிப்பமூற்றிடைகீழ்த்
தகைக்கின்றதையுந்தரித்தணங்கேதர்க்கவாதியாய்ப்
பகைக்கின்றவரைத்தணித்தருண்மாறன்பனிவரைமே
னகைக்கின்றனளன்னைநோக்கமுஞ்சிற்றநபக்தனவே. (193)

### இறைமக ளாடிடநோக்கி யயர்தல்.

194 கரன்போரினைவெல்லயோத்திப்பிரான்வெற்புங்காசினிக்கிந்
திரன்போல்பவரும்புனமுமிபாழுமிரசதவெற்
பரன்போன்மலைமகள்போலிங்குவாழ்வுறவங்கும்வைப்பான்
றான்போலொருவனிருந்திலனேயித்தராதலத்தே. (194)

195 ஆடிப்பிரிந்தசுனைமுதலாகுமவற்றைநெஞ்ச
நேடிப்பிரிந்தென்னுடிங்துற்றதான்மணநீடுஞ்செவ்வி
வாடிப்பிரிந்தறியாமகிழ்மாறன்வரையிலென்னைக்
கூடிப்பிரிந்தவர்நெஞ்சேயிரும்பிற்கொடியதுவே (195)

பாங்கி யாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

196 புரவலர்தாமிங்குவந்தாற்சுரும்புடன்பூசல்வண்டும்
விரவலராமகிழ்மாலைப்பிரான்வெற்பின்மென்மயில்காள்
குரவலர்சோலையுட்பொன்னூசலாடிக்குறிவழிவங்
திரவலராமுன்னஞ்சிறார்க்கெழுந்ததியம்புகவே. (196)

நெடுந்தகை பின்னு ணீடுநினைந்திரங்கல்.

197 மந்தரத்தார்ப்புயத்தான்மங்கைவாணன்வரைமயில்காள்
சுந்தரப்பூண் முலையாரிடங்காட்டத் துணிந்தபொய்தான்
சந்தனச்சோலையென்காமத்தழல்விரியக்கரிந்த
விந்தனச்சோலையென்றுக்குதற்காமுண்மையெண்ணுகிலே. ()

வறுங்களநண்ணி மறுகல்.

198 அன்னங்கிளிமயின்மான்முதல்யாவுமமைந்திருந்து
முன்னம்பொலிந்தபொலிவில்லையான்முத்தமிழ்ப்புலவோர்
மன்னன்புகழ்க்குருகூர்மாறன்வெற்பின்மனைவயிற்சேர்
பொன்னங்கொடிமன்னுயிர்போலுமென்றன்புனமயிற்கே. (198)

வாழூமூர்நோக்கி மதிமயங்கல்.

199 கடங்காட்டியகரடக்களியானையைக்காத்தருளின்
றிடங்காட்டுவார்தில்லைச்சித்திரகூடச்சிலம்பின்முத்த
வடங்காட்டுபூண்முலையாருடன்போனமனதிலினித்
தடங்காட்டுவதவர்நூபுரத்தாளிணைத்தாமரையே. (199)

பகற்குறியிடையீடு முற்றும்.

---

கசு. இரவுக்குறி.

சுக. மாட்சியின்வேண்டன்மறுத்தலுடன்படல்
சூழ்ச்சியிற்கூட்டல்சோலையிற்கூடல்
பாராட்டுதலொடுபோங்கிற்கூட்ட
லுயத்தனீங்கலென்றுன்பானுகும்
வகுத்துப்போந்தவிரவிற்குறிவகையே. (சுக)




௫௦. வேந்தனிருட்குறிவேண்டலுஞ்சேடி
யாய்ந்துவழியினதருமைகூறலும்
வேந்தன்வழியினதெளிமைவிளம்பலும்
வேந்தனுட்டணியியல்பாங்கிவினுதலும்
வேந்தனவர்நாட்டணியியல்வினுதலும்
பாங்கிதந்நாட்டணியியல்பகர்தலுங்
கோற்றொடிக்கிறைவன்குறையறிவுறுத்தலும்
மாற்றநேராதவண்மனத்தொடுகிளத்தலுந்
திருந்திழைபாங்கியொடுதிருந்தியுரைத்தலும்
பொருந்தியதிகுளைபுரவலற்குணர்த்தலுந்
தான்குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதலு
மான்றனக்கிறைவன்வரவறிவித்தலுங்
கொண்டிடஞ்சேறலுங்குறியுய்த்தகறலு
மண்டமர்கடந்தோன்வந்தெதிர்ப்படுதலு
மிறைமகளாற்றினதருமைநினைந்திரங்கலு
மிறைவன்றேற்றலுமெய்தலும்புகழ்தலுங்
குலமகளிறைவனைக்குறிவிலக்கலுமவன்
மெல்லியன்மடந்தையையில்வயின்விடுத்தலுங்
காரிகைக்கிகுளைகையுறைகாட்டலு
மிறைவியையிகுளையிற்கொண்டேகலு
மிறைவனையிகுளைவரவுவிலக்கலு
மிறைமகன்மயங்கலும்பின்னவடுயர்நிலை
செப்பிவிடுத்தலுந்திருநுதற்புணர்ந்தவ
னீங்கலுமென்னநிகழ்த்துமூவொன்பது
மீங்கினிதுணர்த்துமிரவிற்குறிவிரியே. (௫௦)

### வேந்தன் இருட்குறிவேண்டல்.

200 அடுபோரரக்கரைவென்கண்டமாயனயோத்திவெற்பி
னிடுபோரிடைத்தினைப்பாற்கதிர்யாவுமினத்திநெடுங்
கொடுபோங்கிளியினைப்பின்றொடர்வேன்றுடபாற்கதிரோ
படுபோதுகண்டனன்கண்படைக்கேதிடம்பைந்தொடியே. (200)

201 சுருள்கொண்டவாசமலர்க்குழலீர்மழைதூங்கிவெங்கு
மிருள்கொண்டதுநெறியுந்தெரியாதினிநீரெனைவான்
பொருள்கொண்டசெந்தமிழ்தேர்மாறன்வெற்பிற்புதுவிருந்தா
யருள்கொண்டெதிர்ந்திளைப்பாற்றுமதேயில்லறத்தியல்பே. ()

பாங்கி நெறியினதருமைகூறல்.

202 படவாளரவம்வடவாநலத்தைப்பனித்தும்வன்கட்
கடவாரணத்தைவிழுங்கிருள்வாய்மறைகற்றவொண்மைத்
திடவானவர்புகழ்சீராமவிண்ணகர்ச்செல்வன்வெற்பின்
மடவாள்பொருட்டிங்ஙனிவருமாறெங்ஙன்மன்னவனே. (202)

தலைவன் நெறியினதெளிமைசெப்பல்.

203 சினத்துளவேழத்திரளுங்கொன்னுகமுஞ்சேயிழையாய்
புனத்துளவோன்றென்புலியூரென்னப்பன்பொருப்பிலின்பத்
தனத்துணைவேழத்தனிவாளரவல்குற்றையலையான்
மனத்துளநீங்குமணங்கவள்பேர்சொல்லவந்திக்குமே. (203)

பாங்கி வேந்தனுட்டணியியல் வினுதல்.

204 வண்டார்பொழிற்றிருவைகுந்தைமால்வெற்பின்மன்னநின்னுட்
டுண்டாயவருடுக்குந்தழையேதுடுத்தான்மனத்துட்
கொண்டாதரித்தவர்பூசுவதேதுகுழன்முடிக்குந்
தண்டாமமேதெவனேவிளையாடுந்தருநிழலே. (204)

தலைமகன் அவர்நாட்டணியியல் வினுதல்.

205 எமர்நாட்டணிதழைபாதியகூறிபெவன்கொல்செவ்வே
ளமர்நாட்டியவடிவேல்விழியாயழியாதவிண்ணோர்
தமர்நாட்டங்கண்டின்புறுமாயன்றங்குதங்கால்வரைவாய்
நுமர்நாட்டவர்தழையாதியயாவுநுவலுகவே. (205)

பாங்கி தந்நாட்டணியியல்பகர்தல்.

206 அருமறையோர்தொழுமன்புடையார்தெற்றியம்பலத்தெங்
கருமுகில்போனிறத்தார்சிலம்பாகன்னிகாரமென்பூ
மருமலர்மாந்தழைமான்மதத்தேய்வைவளரிளவேய்
தருமணிபூண்சந்தனச்சோலையாடுமத்தண்ணிழலே. (206)

கோற்றேடிக்கிறைவன்குறையறிவுறுத்தல்.

207 நேரிடும்பேடையலகோடலகற்பநீங்கிலன்றில்
வீரிடும்போதென்னைநோக்குகின்றார்மள்ளர்வீதியெல்லாம்
போரிடுந்தண்பொருநைக்குருகூரன்பொருப்பின்முல்லைத்
தாரிடும்பூங்குழலாய்சொல்வதேதத்தலைவருக்கே. (207)

208 பனிப்பிறைப்பற்றுளைக்கட்செவித்துத்திப்பணுடவிமேற்
குனித்தபொற்சிற்றடிப்பேரையில்வாழ்குழைக்காதர்வெற்பிற்
றுனித்தழற்கட்களிற்றைக்கொடுஞ்சியங்துரத்ததர்வாய்த்
தனித்துறற்குய்த்துணர்த்துஞ்சுடர்வேலவன்றூழ்குழலே. ()

மாற்றநேராதவள் மனத்தோடுகிளத்தல்.

209 மழைத்தாரைமாசுணங்தூங்கியதேய்தருமையுநெய்புங்
குழைத்தாலனையகனையிருள்வரயன்பர்கூட்டத்தன்பு
தழைத்தாரெனச்சொன்னதலேமைமார்தடத்தானைமுன்னு
ளழைத்தானையேத்தியநாவீறன்வெற்பிலரிவையரே. (209)

திருந்திழை பாங்கியோடு திருந்தியுரைத்தல்.

210 கரவேதுமின்றியிரப்பாரிரவினைக்காய்ந்துசெம்பொன்
றரவேபயிலும்பகல்புரிவார்தலைச்சங்கத்துள்ளா
னரவேபயிலணையான்மனூராமனணிவரைவா
யிரவேபயிலுகலம்புரிந்தாலிதற்கென்செய்வதே. (210)

பொருந்தியதிகளை புரவலற்குணர்த்தல்.

211 மல்லார்புயத்தண்ணலேயெனைநீவழிவந்துரைத்த
தெல்லாம்வழிபட்டுரைத்ததற்கேயிமையோர்கண்மண்மே
னல்லார்புகழ்திருநாங்கூரன்வெற்பினினங்கையொன்றுஞ்
சொல்லாதிருந்தமைநேர்பட்டதாகத்துணிந்தனனே. (211)

பாங்கி தலைமகனைக் குறியிடத்துநிறீஇத் தாய்துயிலறிதல்.

212 மெய்ப்புறவேதந்தமிழ்செய்தமாறன்விண்டோய்துடரித்
துப்புறழ்செங்கனிவாயன்னமேயகச்சோலையுள்ளாய்
முப்புடைத்தென்னம்பழம்வீழமாவின்முசுக்கலைபாய்ந்
தப்புறச்சோலையுள்ளாயகவாநின்றதாய்மயிலே. (212)

பாங்கி தலைமகன்வரவழிவுறுத்தல்.

213 எழிலகத்தாமரைக்கேவைத்துவாழ்த்தியிறைஞ்சுமன்பர்
தொழிலகத்தாய்விட்டுநீங்காதமாயன்றுவரையினம்
பொழிலகத்தாயினர்பூண்முலையாய்மள்ளர்பூம்பழனத்
துழிலகத்தாழ்ந்தகொழுக்கழுநீர்கமழூருமே. (213)

---

208. 'சிற்றடிச்சித்திரக்கார்குருகேசன்வெற்பில்', 'துரத்திருள்வாய்', 'கதிர்வேலவன்' என்பன மாறனலங்காரத்துக்கண்ட பாடம் (பக்-கசஎ).

பாங்கி தலைமகளைக் குறியிடத்துக்கொண்டுசேறல்.

214 தூசறைசார்நின்புணர்முலையானைத்துணைப்படைவேள்
பாசறையாம்பொழில்கைக்கொண்டவேலர்கைப்பற்றுதற்காய்க்
காசறைதோய்குழலாய்கச்சிமால்வெற்பிற்கற்பினிற்குந்
தேசறைபோமனமில்லாதெதிர்கொள்ளுஞ்செய்கையதே. (214)

215 கண்புனல்பாயுங்கணையிருவாய்க்கதிர்வேறுணையாய்
வண்புகழ்மாறன்வழுதிநன்னாடன்மணிவரைமேற்
றண்புனலூரான்வந்தாலருட்பார்வைக்குத்தக்கதொன்றும்
பண்புறவாடியெதிர்கொள்வதேயின்பப்பைந்தொடியே. (215)

தலைமகளைக் குறியிடத்துய்த்துநீங்கல்.

216 பைகுவியாவயநாகணையான்றன்பதத்திலென்றுங்
கைகுவியார்கண்ணருள்குவியான்றன்கரிகிரிமேல்
வைகுறுமாலைக்கிடையாமத்தேமென்மலர்க்குழற்குக்
கொய்குவன்யானிவண்வைகுகநீபொற்கொடியிடையே. (216)

தலைமகன் தலைமகளைக் குறியிடத்தெதிர்ப்படுதல்.

217 இணையாழிவட்டத்தெவரேனுங்கார்நள்ளிரவைவெயிற்
பணையாழியாற்பகலேதந்தமாலன்பிற்பைந்தொடிகைக்
கணையாழிவட்டமணியேகமலக்கடைதிறந்தித்
துணையாழிரவைப்பகலாக்கியசெஞ்சுடரவனே. (217)

218 சேவகத்தாற்றென்னிலங்கேசனைவென்றசெம்மல்விண்ணோர்
நாவகத்தானெம்பிரானறையூர்நம்பிநாட்டுக்கஞ்சப்
பூவகத்தாயகபாடங்கணீக்கியிப்புன்னையம்பூங்
காவகத்தாய்நள்ளிருள்வந்தவாறெங்ஙன்காரிகையே. (218)

தலைமகள் ஆற்றினதருமைநினைந் திரங்கல்.

219 சல்லியமுட்சரமாரிபெய்தேசஞ்சரிக்கவெம்போர்
வல்லியநாகத்திரைதேரரிடைமாதவன்சீர்
சொல்லியசெந்தமிழ்ப்பாமாறன்செம்பொற்றுடரியின்வா
யெல்லியினீவந்தவாறெங்ஙனேசொல்லிறையவனே. (219)

தலைமகன் தலைவியைத் தேற்றல்.

220 கலவஞ்செறிமயிற்பேடையொப்பாய்கணிகண்ணனென்றோர்
புலவன்சொலச்சொன்னவண்ணஞ்செய்தார்திங்கட்புட்பகச்சார்
விலகும்பொன்மாளிகைவெஃகாவனையநின்மேனியும்வா
ணிலவுங்குடிகொண்டிருப்பவெங்கேயிருணேர்படுமே. (220)

புணர்ச்சிமகிழ்தல்.

221 அறுநான்கிரட்டியிளமையென்றேதெவிட்டாதவின்ப
முறுநானமானிடர்பாற்குறைத்தேநறையூறுந்துழாய்
நறுநாண்மலர்புனைதண்காவுளான்பெற்றநான்முகன்றன்
பெறுநாளதிகம்படைத்ததந்தோவென்னபேதைமையே. (221)

222 நற்பாவலவர்தொகுத்தசொற்பாடலைநற்றமிழ்தேர்
சொற்பாவலர்செவியுட்கொள்ளவேதுறைதோறுநின்ற
கற்பாரைக்கண்டுமகிழ்ந்ததொன்றுங்கண்ணன்கச்சிவெற்பிற்
பொற்பாவைபூண்முலைதோய்ந்தின்பவாரியுட்புக்கதுவே. (222)

புகழ்தல்.

223 உரைத்திடவேவெண்மைபெய்துவதாமுரிசித்துமுத்த
நிரைத்திடவேநின்னிதழுமவ்வாறெய்துநீடுசெந்தா
மரைத்திருமாதகலாவல்லவாழப்பன்மால்வரைவாழ்
திரைத்திருவேதுகிரெய்தாதுமென்மையுந்தித்திப்புமே. (223)

தலைமகளிறைவனைக் குறிவரல்விலக்கல்.

224 உறுபுலிவாரணவேட்டையைவேட்டிங்குறுபுலிக்கோர்
மறுபுலியாமெனக்காவல்செய்வார்குன்றவாணரென்றூற்
சிறுபுலியூர்நெடுமால்போலநீயுஞ்செறிவிற்கொற்றம்
பெறுபுலியாயினுள்ளிருள்வாரல்பெருந்தகையே. (224)

225 வணங்காப்பரசமயந்தலைசாய்த்துவணங்கக்கற்றோர்
கணங்காதலிப்பத்தமிழ்செய்தமாறன்கனவரைவா
யணங்காயவைகடமாடுதண்சாரலரையிருள்வா
யிணங்காதிங்கென்பொருட்டால்வருந்துமீள்வதிறையவனே. (225)

தலைமகன் தலைமகளை யில்வயின்விடுத்தல்.

226 மின்னுயிர்க்குங்கொலைவாளமர்வேல்விழிமெல்லியலா
யின்னுயிர்ப்பாங்கியையொல்லையிற்கூடியெழுதிரைப்பார்
மன்னுயிர்க்காவல்புரிநெடுமாயன்வதரிவெற்பி
னுன்னுயிர்த்தாயர் துயிலுணராமுன்னுறைந்தருளே. (226)

பாங்கி தலைமகளையெய்திக் கையுறைகாட்டல்.

227 முதிரும்புளகமுலைப்பன்மராகமுமுத்துமிளங்
கதிருமுதயமதியுமென்றேநண்ணெகிழ்ந்துபைந்தா
துதிருந்துணைமலர்கொண்டுவந்தேன்கண்டுவந்தருள்கா
ரதிரும்பொழிற்றென்னரங்கேசன்மால்வரையாயிழையே. (227)

பாங்கி தலைமகளை யிற்கொண்டேகல்.

228 தினைக்காவனீக்கிநமைக்காரணரிற்செறித்ததிரு
மனைக்காவல்பெற்றநற்றாயரென்பார்மன்னுயிர்களெல்லாந்
தனைக்காவலாய்க்கொண்டதண்காவின்மாயன்றடவரைவா
யெனைக்காவனுடுவராலணங்கேயங்கெழுந்தருளே. (228)

பின்சென்று பாங்கி தலைமகனை வரவுவிலக்கல்.

229 நாட்டங்குவிந்தறியார்புறக்காவனமாகத்தாய்க்
கூட்டங்குவிர்தனர்தாயரென்பார்குருகூரன்மண்ணோர்
வாட்டந்தவிர்த்தமகிழ்மாறன்வெற்பின்மடந்தையையே
வேட்டங்கெளிதென்றினிவாரனீவடிவேலவனே. (229)

தலைமகன்மயங்கல்.

230 தீம்பாலடிசில்கொழுங்கனிகூட்டிச்செம்பொற்கலத்துண்
மேம்பாட்டினர்மிடற்றைப்பிடித்தாலொக்குமெல்லியலாய்
தாம்பாற்றயிருண்டுகட்டுண்டமாயன்றங்கால்வரைவாய்ப்
பூம்பாவையோடெய்துமின்பத்துணிதுன்பம்பூட்டியதே. (230)

தோழி துயர்கிளத்திவிடுத்தல்,

231 உலம்புரிதோளண்ணலேபெரும்பாந்தளுரிவையுரீஇ
நிலம்புரிந்தூர்கள்ளிருட்கடநீந்திநின்னூர்புகுந்தால்
வலம்புரிவாய்வைத்தமால்வைத்தமாநிதிமால்வரையெங்
குலம்புரிகொம்புய்யச்செவ்வாய்ப்பொற்சின்னங்குறித்தருளே. ()

ஊர்புதுகொம்புதுறித்தலும் இது.

தலைமகட்புணர்ந்தவனீங்கல்.

232 மறவிருள்வாதியரைப்புறங்காண்மகிழ்மாறன்வெற்பி
னறவிருள்பூங்குழன்மெல்லியலாண்முகநாண்மதிதா
னறவிருள்காதலகவிருள்சீத்தன்புகூர்ந்ததர்சார்
புறவிருள்சீக்குமெனக்கெளிதூர்புகல்பூங்கொடியே. (232)

இரவுக்குறி முற்றும்.

---

## கரு. இரவுக்குறியிடையீடு.

௫௧. எல்லுக்குறியிடையீடிருவகைத்தவைதாம்
அல்லகுறிவருந்தொழிற்கருமையென்றாகும். (௫௧)

[அல்லகுறி.]

௫௨. மான்விழிக்கிகுளைமன்வரவுணர்த்தலுந்
தான்குறிமருண்டமைதலைவியவட்குணர்த்தலுஞ்
சேடியிறைவன்றீங்குகிளத்தலு
மூடியிறைவனெழிதலுமொண்ணுதல்
வறுங்களந்தன்னைவந்துகண்டிரங்கலு
நறுந்துணரலர்க்குறிநாட்டமுற்றினையலு
மூறுந்துயரிகுளைக்குரைத்தலுமுறுந்துய
ரிகுளைதணித்தலுமிறைவன்மேலிகுளை
குறிபிழைப்பேற்றலுங்கோதைமேற்றலைவன்
குறிபிழைப்பேற்றலுமவள்குறிமருண்டமை
யவளவற்கியம்பலுமாயிடைப்பாங்கி
கொற்றவன்கொடுமைகுறித்தவட்குணர்த்தலு
மென்பிழைப்பன்றென்றிறைவிநோதலுமென
வாறிரண்டுடனென்றல்லகுறிவிரியே. (௫௨)

மான்விழிக் கிகுளை மன்வரவுணர்த்தல்.

233 மண்படைவேதன்புகழ்மங்கைவாணன்மணிவரைவாய்
நண்படைதன்பெடைபாகந்தழீஇயபுன்னைகத்தன்னம்
புண்படையுள்ளத்தனவாயொருகணப்போதுமிராக்
கண்படைகொண்டிலயாதோவுணர்ந்திலன்காரிகையே. (233)

தான்குறிமருண்டமை தலைவி யவட்குணர்த்தல்.

234 ஆராவமுதைக்குடந்தைப்பிரானையடிவணங்க
வாராமையின்மற்றொருவழிபோய்வழுவாதமுத்தி
சேராதிடர்ப்பட்டவர்போலமீண்டிருட்செம்மல்குறி
நேராமையிற்றுன்பவாரியுணீந்தினனேரிழையே. (234)

235 பொறியாதரிக்கும்புருடோத்தமர்வண்புருடைவெற்பிற்
குறியாததனைக்குறியென்றுநாடிநங்கொண்கர்வந்து
செறியாதபோதிலலம்வருநோக்கஞ்செறிந்தங்கென்னை
யறியாதுமீண்டனன்புண்பெற்றதாகமணியிழையே. (235)

சேடி யிறைவன் றீங்குகிளத்தல்.

236 நெறிபிழைத்தாரைத்திருத்தியஞானிகணெஞ்சகலாச்
செறிபிழைத்தார்தில்லைச்சித்திரகூடச்செழுஞ்சிலம்பிற்
பொறிபிழைத்தாரென்பதில்லாதநம்புருடோத்தமருங்
குறிபிழைத்தாரென்பதானலிதற்கென்கொல்கூறுவதே. (236)

ஊடி யிறைவ னெழிதல்.

237 கிடையாதபொன்னைக்கிடைக்குமென்றேகிளைத்திட்டுத்துன்பத்
தடையாவெனையடைவித்தநெஞ்சேயளியார்வகுளத்
தொடையானருவித்துடரியின்வாயுன்னைத்தோழமைக்கொண்
டிடையாமத்திங்கிட்டவூழ்வினைபோலில்லையீடுள்ளதே. (237)

தலைமகள் வறுங்களந்தன்னை வந்துகண்டிரங்கல்.

238 வனக்குச்சரியிந்தளைநைவளம்வரிவண்டுசெந்தேன்
றனக்குச்சரிதண்டுழாய்த்தஞ்சைமால்வெற்பிற்றண்பொழிலே
யெனக்குச்சரியில்லையாக்கியகேள்வரெய்தாதபடிக்
குனக்குச்சரியில்லையாக்கியதாரிங்கொடியெறிந்தே. (238)

நறுந்துணரலர்க்குறி நாட்டமுற்றினையல்.

239 நாகத்தலைவன்வணங்கும்பிரானறையூரன்வன்போர்
நாகந்தலைவன்றொழித்தருள்கார்வெற்பினள்ளிருள்வாய்
நாகத்தலைநன்குவலடஞ்சேர்த்தநவெனென்பொன்
னாகத்தலைநன்குவலயஞ்சேர்த்திடநிலரே. (239)

உறுந்துய ரிகுளைக்குரைத்தல்.

240 மாறுஞ்சமயமதமழிந்தோடமதுரமதா
யூறும்படிசெந்தமிழ்செய்தமாறனுயர்வரைவாய்க்
கூறுந்தலைவர்குறிபிழைத்தான்மடக்கோதையர்தாந்
தேறும்படியெங்ஙனேபெரியோர்தம்மைச்சேயிழையே. (240)

தலைமகளுறுந்துயர் பாங்கிதணித்தல்.

241 கானந்தழைத்தமொழியணங்கேகாரிமாறனுண்மை
ஞானந்தழைத்ததமிழ்க்குருகூரனன்பொற்றுடரித்
தானந்தழைத்தமதன்பர்வாய்மைதவறில்விண்ணோர்
பானங்கொதிக்கும்வடபாலுதிக்குமப்பானுவுமே. (241)

இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றல்.

242 ஏற்றுநுழைச்சென்றளித்தாரிரக்கிலிரங்தகடன்
மாற்றார்தமையொத்தனைகிளைத்தேதினிமன்னவிண்ணோர்
போற்றுதாவினன்போரேற்றுநாயன்றன்புட்குழிவா
யாற்றுதவள்வரயாதோவழிநின்னணிநகர்க்கே. (242)

இறைவிமே லிறைவன் குறிபிழைப்பேற்றல்.

243 அறந்தந்தநாட்சிறிதாராவமுதுண்டவரையறம்
புறந்தந்துநீர்புறந்தந்ததியாதென்பபோலுமுற்றத்
துறந்தந்தணாளர்புகழ்மகிழ்மாறன்றுடரிபின்னே
மறந்தந்தவேல்விழியாள்பொருட்டாற்சொன்னவாசகமே. (243)

தலைமகள் குறிமருண்டமை தோழி தலைமகற்குரைத்தல்.

244 ஏவினைவாங்கிமாரமரமேழெய்தவேந்தல்பொற்றுட்
பூவினைப்பொன்முடிமேற்கொண்டமாறன்பொதியிற்சந்தக்
காவினைமேவிக்குறிபிழைத்தாயெனக்கண்டண்ணலே
தீவினையீதென்றுயிர்த்தங்குமீண்டனள்சேயிழையே. (244)

கோற்றவன்கூறிய கோடுமையுணர்த்தல்.

245 கூற்றுருவானதுகுஞ்சரவேட்டைக்குக்கோளரியாம்
வேற்றுருவாய்த்திரிகான்வந்துகாதலர்வேதவிண்ணோர்
போற்றுருவாந்திருப்புட்குழிமாயன்பொருப்பிலுள்ளந்
தேற்றுருவாநின்றிமீண்டனம்யாமென்பர்தேமொழியே. (245)

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்.

246 ஐதாயநூபுரநாதமென்போதிலடக்கிக்கையாற்
பைதாழரவல்குன்மேகலைதாங்கிப்பைப்பையச்சென்றேன்
மைதாழ்பொழிற்றென்மயிலையின்மாயன்வரையிலென்கண்
ணெய்தாப்பொதும்பரின்றெங்கெய்திமீண்டனரேந்திழையே. ()

[அல்லகுறி முற்றும்.]

[வருந்தொழிற்கருமை.]

௫௮. தாய்துஞ்சாமையூர்துஞ்சாமை
நாய்துஞ்சாமைநகரகாவலர்
கடுகுதல்கங்குலினுடுபதியுதித்தல்
கூகைகுழறல்குக்குடங்குரல்காட்ட
லாகியவேழுமல்லுக்குறிக்கிறைவன்
வருந்தொழிற்கருமைபொருந்துதற்குரிய. (௫௮)

தாய்துஞ்சாமை.

247 மாயாப்பிறவிப்பிணிதடுத்தாட்கொண்டமாறனங்கை
சேயாமுதல்வன்றடரியின்வாயன்பர்சேய்த்தகன்ற
நோயானதைமம்மர்நோயாக்குதற்கிருநோக்கஞ்சற்றுந்
தாயானவளுறங்காள்செயலேதினித்தாழ்குழலே. (247)

ஊர்துஞ்சாமை.

248 காருந்துஞ்சாதசலராசியுமன்னகண்ணன்விண்ணோர்
தேருந்துஞ்சாதபுளிநிழன்மாறன்சிலம்பிலுள்ளார்
யாருந்துஞ்சாரல்லராலுலென்னன்பரிணைவிழிபோ
லூருந்துஞ்சாதென்விழியுந்துஞ்சாதினிபொன்னுதலே. (248)

நாய்துஞ்சாமை.

249 கோளிதுஞ்சாவயநாகணையானருள்கூர்குருகூ
ராளிதுஞ்சாதபுளிநிழலான்மலயத்திருகண்
வாளிதுஞ்சாவினையேன்றன்னைநோக்கிமெகிணர்வரின்
ஞாளிதுஞ்சாதன்னைதுஞ்சாததற்கென்னவிலுவனே. (249)

### காவலர்கடுகுதல்.

250 கோவலர்பால்வெண்ணைகட்டுண்டமாயன்குறுங்குடியான்
பாவலர்போற்றிடநாதவினோதன்பனிவரைவா
யேவலராமிக்குவில்வேளொடுமிரவிற்கடுகுங்
காவலருண்டினியென்னாருயிர்க்கெவர்காவலரே. (250)

### நிலவுவெளிப்படுதல்.

251 விதிக்கின்றநான்முகனைப்படைத்தானைமெய்வேதவைப்பாற்
றுதிக்கின்றசெந்தமிழான்சடகோபன்றடரியில்யான்
மதிக்கின்றகாதலர்த்தோயாமலெல்லியின்மாதரைத்தோய்ந்
துதிக்கின்றழுடனையோமதியோவென்பதுண்மையதே. (251)

### கூகைகுழறல்.

252 தோகைக்குமென்குயிற்கும்பகைத்தாலுந்துயின்றதிரு
மோகைப்புயலைத்தொழுமகிழ்மாறன்றன்மொய்வரைவாய்
வாகைத்தொடைபுனைவேலண்ணலார்வரவேவிலக்குங்
கூகைக்குலத்தைப்பகைத்ததிங்கேதுகுலக்கொடியே. (252)

### கோழிகுரல்காட்டல்.

253 கடமுழக்குங்கடாசலங்காய்ந்தகைவேலர்மனத்
திடமுழக்குந்துயர்தீர்க்குமுன்னேதிரணுகுநன்னீர்த்
தடமுழக்குங்குருகூர்ச்சடகோபன்றடவரைக்குக்
குடமுழக்கும்வன்குடமுழவாமெனக்கோற்றொடியே. (253)

254 குடந்தையுண்மேவியவாராவமுதங்குடங்கையினோர்
குடந்தயிர்கட்டுண்டுகட்டுண்டகார்வெற்பர்கொங்கைப்பொன்டி
குடந்தையல்கூர்தரக்கூடாதுகங்குலிற்கூடியகுக்
குடந்தையெனுங்குழற்கொத்ததெவ்வாறன்பர்கூடுவரே. (254)

[வருந்தொழிற்கருமை முற்றும்.]

௫௪. வரைவிப்படியெனவைத்தவீரொன்பதொன்
றிரவுக்குறியிடையீட்டுவிரியே. (௫௪)

இரவுக்குறியிடையீடு முற்றும்.

## ௧௬. வரைதல்வேட்கை.

௫௫. அகத்தெழுமச்சமுமுவர்ப்புமாற்றுமையு
மிகப்பயின்மூவகைவரைதல்வேட்கை. (௫௫)

௫௬. மின்னிடைவருத்தம்பாங்கிவினாதலுந்
தன்மறைசெவிலியறிந்தமைசாற்றலும்
பார்த்திபன்வருந்தொழிற்கருமைபகர்தலும்
பார்த்திபனகர்க்குச்செலவொருப்படுதலு
மிறைவனையிகுளையியற்பழித்துரைத்தலு
மிறைவியாயிடையெதிர்ந்தியற்படமொழிதலுங்
கனவினலிவொடுகவினழிவுரைத்தலு
மிடர்தலைமகன்றனக்கியம்பவிரும்பலும்
படருறப்பாங்கிநீசொல்லெனப்பணித்தலு
மலர்பார்த்துற்றவச்சந்தன்னுட
னாறுபார்த்துற்றவச்சக்கிளவியுங்
காமமிக்ககழிபடர்கிளவியுந்
தன்னுட்கையாறெய்திடுகிளவியு
நெறிகுறிவெறிபிறநிகழ்த்திவிலக்கலுங்
குரவரையாங்கெதிர்கொள்ளுவித்தலுமென்
றோதியவழிபயிலொருபத்தொன்பது
மேதகவரைதல்வேட்கையின்விரியே. (௫௬)

### மின்னிடைவருத்தம் பாங்கிவினாதல்.

255 அரனார்பதுமத்தயனாருடனின்றடிபரவு
நாரணன்வதரித்திருமால்வெற்பினன்னுதலாய்
விரனாண்மலர்கொய்துநீர்குடைந்தாழ்ந்துகொல்மிக்கபுரந்
தரனார்விரும்புந்திருமேனிவாடித்தளர்ந்ததுவே. (255)

256 மறைபோலியற்றமிழ்தேர்குருகூர்மகிழ்மாறன்வெற்பிற்
பிறைபோல்விளங்கியசிந்துரவாணுதற்பெண்ணரசே
கறைபோமுதயமதிபோன்றசெம்முகங்கன்றியுநெஞ்
சறைபோயதேதன்றிருமேனிவாடியதன்றியுமே. (256)

### தன்மறை செவிலியறிந்தமை சாற்றல்.

257 வளையாழியங்கைத்திருநெடுமாயன்வடமலைவா
யிளையார்மணந்துதணந்தவப்போதன்னையெய்தரிலஞ்

கிளையாமுகங்கவிழ்ந்தேன்றனைப்பார்த்திருகெண்டையங்கண்
விளையாரழுதுகவெய்துயிர்த்தேகினண்மெல்லியலே. (257)

தலைவன்வருந்தோழிற்கருமைசாற்றல்.

258 கற்றுய்ஞமலிகர்க்காவலர்மதிநன்குரலொன்
றற்றூர்குடிஞைநூட்டாட்டுணைச்சேவலசோதைபெற்ற
சிற்றுயன்விற்றுவக்கோட்டுறங்காதுசெருவிளைக்கக்
கற்றலெனையன்பரெவ்வாறிங்கெய்துவர்காரிகையே. (258)

தலைமகனூர்க்குச்செலவோருப்படுதல்.

259 அந்தளவார்குழல்கோலஞ்செய்தேயரங்கேசன்வெற்பில்
வந்தளவாவின்பந்தகன்றூர்தம்மருதநன்னாட்
டிந்தளைவளங்குச்சரிபாடிவண்டேறுதண்பூங்
கொந்தளவாணுதலாய்செல்வதேயினிக்கொள்கையதே. (259)

இறைவனை யிகுளை யியற்பழித்துரைத்தல்.

260 கோணகணைத்தென்குருகைப்பிரான்வெற்பிற்கோமளமே
பேணதுபேரின்பந்தகன்றூர்தம்பெரும்பதிக்கே
நாணதுறிற்கற்புநாணுமென்னுமந்தநாணழிந்துங்
காணதிடிற்பின்னைநின்னுயிர்யாரிங்குக்காண்பவரே. (260)

இறைவியாயிடையெதிர்ந் தியற்படமொழிதல்.

261 அடரேய்பசும்பொற்குடமுலையாயரங்கேசனிளஞ்
சுடரேயெறிக்குந்திகிரிப்பிரான்வெற்பிற்றேய்ந்தகன்றூர்
படரேயிழைத்தமைவாரல்லராயும்படர்ந்திலரெய்
திடரேதெனத்தெருளாதையகோவையுமென்னெஞ்சமே. (261)

கனவுநலிவுரைத்தல்.

262 மருண்மாலைவாய்மலர்காதன்மென்பூக்கண்மலர்குவிப்பப்
பெருமாலையுட்கொள்கனவின்பின்னேதிருப்பேர்நகர்வாழ்
திருமாலையேத்துமகிணரென்பாலவந்துசெவ்வியின்பர்
தருமாலையில்விழித்தங்கோசதித்தவித்தாரைகளே. (262)

263 மனவிலங்காகியபாசம்விட்டோடமறைப்பொருளாய்ந்
தனவிலங்காதுணர்வோர்புகழ்மாயன்றங்கால்வரைமே
னனவின்முன்னாட்டுன்பந்தந்தநல்லாலன்பர்நல்குகங்குற்
கனவிலங்தோவிழித்துந்துன்பமீந்தகருங்கண்களே. (263)

தலைவி பாங்கியோடு கவினழிவுரைத்தல்.

264 ஈன்றாரூமூவரிருபாலுயிரொன்றிசைந்தவுடன்
மூன்றாயுணர்வொன்றினரெனலாயுமுத்திக்குவித்தே
போன்றார்புகழ்புலியூர்மாயன்வெற்பிலென்புன்கணெல்லாந்
தோன்றாதுநுங்கட்கியானெவனோவினிச்சொல்லுவதே. (264)

இடர்தலைமகன்றனக் கியம்பவிரும்பல்.

265 அலைபோனகமென்றருந்தியகாரத்தியூரன்முன்னால்
விலைபோதமுற்றவர்போற்றருளாளன்றன்வெற்பர்க்கென்கை
வலைபோயயர்ந்தைவாணுதலாய்சொல்லில்வாழ்பயிர்க்குக்
கலைபோம்பசுவுக்குவாயுறையாமென்கைகாட்டுமதே. (265)

படருறப்பாங்கிநீசொல்லெனப்பணித்தல்.

266 யாயேயெனவந்தபேய்முலையாவின்னுயிரையுண்ட
சேயேயெனவையம்போற்றியகார்தெற்றிவெற்பர்க்கன்பா
நீயேநினதுகுறையுரைப்பாய்நிகழ்த்தற்கரிய
நாயேனுரைத்திங்கெவனோபயனின்பநன்னுதலே. (266)

அலர்பார்த்துற்ற வச்சக்கிளவி.

267 வடியார்சுடரிலைவேலர்க்கென்காதல்வடித்துணர்த்த
முடியாதுமோகங்கொழுந்துவிடாநிற்குமூவுலகத்
தடியார்தமக்கெளியாரத்தியூராருளாளர்வெற்பிற்
கொடியாரிடத்தலர்தோன்றிற்கண்ணீருங்குதிகொள்ளுமே. ()

ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

268 திடன்போதனென்னுந்திருமகிழ்மாறன்சிலம்பில்வந்த
கடன்போம்படிபிடிபின்செல்வதோர்களியானையென்றே
யிடன்போதடலரிகிட்டாதிறைபின்பிருட்கிடையக்
குடன்போகப்பெற்றிலனேயுடன்போனவுளத்தொடுமே. (268)

காமமிக்ககழிபடர்கிளவி.

269 பொன்கோட்டியமலர்ப்பூவணைச்சேவலைப்புல்கிநன்னீர்
நன்கோட்டகத்தினில்வாழ்பெடையோதிமநான்மறைதேர்
தென்கோட்டியூருறைவார்சொக்கநாரணர்திண்சிலம்பர்க்
கென்கோட்டியுமதன்றன்கோட்டியுஞ்சென்றிசைக்கிலவே. (269)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

270 பூவிற்சிறந்தகமலானனம்புல்லெனவதன்மேற்
காவிக்கருங்கண்கள்கண்ணீருகவுறங்காததனாற்
சேவிக்கவாழ்விக்குமால்சிங்கவேள்குன்றிற்றேமலிநீ
ராவித்திருவையுநீத்தாருளரென்றறிந்தனனே. (270)

நெறிவிலக்குவித்தல்.

271 திரையிருள்வேலைவளாகத்தர்வீட்டின்பஞ்சேரமுன்னூ
லுரையிருளாமற்றமிழ்செய்தமாறனுயர்வரைக்கார்
புரையிருகோட்டுக்கடாயானையைப்புலிபுண்படுத்து
மரையிருள்யாமத்திறைவரெய்தாதுரையாயிழையே. (271)

குறிவிலக்குவித்தல்.

272 அறிவழியாதென்னையாள்குருகூருண்மாறனைந்து
பொறிவழியாமைம்புலனைவென்றோர்வெற்பிற்பொன்னையன்னை
வெறிவழிபூம்பொழில்வாய்விளையாடல்விலக்கினணீ
குறிவழிவாரலெனவணங்கேயுரைகொற்றவர்க்கே. (272)

வெறிவிலக்குவித்தல்.

273 தடுத்தாடல்கோடலரிதாங்களிற்றைத்தடுத்தெனுயிர்
கொடுத்தார்கொடுத்தவின்பத்துண்டுமேகுறியாதடிக்கி
ழுடுத்தார்தமக்கன்புகூரான்பின்மால்வெற்பிலன்னையர்தாந்
தொடுத்தார்வெறியென்றிதற்கணங்கேயவன்சொல்வதுவே. ()

பிறவிலக்குவித்தல்.

274 தேசுளமேனித்திருமாமதலைதென்சேறைவெற்பிற்
காய்சினவேழங்கடிந்தணைந்தான்கடிமார்பிருக்கக்

கூசுவதேயொன் றுமில்லாமலுமகட்கோடற்கென் று
பேசுவராமயலார்கற்புநா ணும்பெருகநன்றே. (274)

குரவரையாங்கேதிர்கொள்ளுவித்தல்.

275 குல்லையந்தாமத்தழகர்தென்கூடற்குலகிரியே
யெல்லையதாகநிகழ்ந்ததெல்லாமெமர்பாலணங்கே
யொல்லையிற்போயுரைப்பாயுரையாவிடி லூனமில்லாத்
தொல்லையவர்நங் குடிக்கிழுக்காமெய் துந் துன்பமுமே. (275)

வரைதல்வேட்கை முற்றும்.

---

## கஎ. வரைவுகடாதல்.

ருஎ. கரத்தன்மறுத்தல்கழறன்மெய்த்தலென
வாத்தகுநால்வகைவரைவுகடாதல். (ருஎ)

ருஅ. சேடிவினவியசெவிலிக்குமறைத்தமை
யாடவற்கியம்பலுமலரறிவுறுத்தலு
நற்றாயுணர்ந்தமைநட்புறவுணர்த்தலு
வெற்றிவேலவன்வெறியச்சுறுத்தலு
மூரைபயில்பிறர்வரைவுணர்த்தலுமதன்பின்
வரைவெதிர்வுணர்த்தலும்வரையுநாளுணர்த்தலுந்
தலைமகளறிவுதலைமகற்குணர்த்தலு
மிகலறக்குறித்தவிடம்பெயர்த்திடுதலும்
பகல்வருவானையிரவுவரலென்றலு
மிரவுவருவானைப்பகல்வரலென்றலு
மிருபொழுதினு மிடைவிடாதுவரலென்றலுங்
கொற்றவனுடுமூருங்குலனு
மற்றவன்புகழும்வாய்மையுங்கூறலு
மாற்றிடையூறினதச்சங்கூறலு
மாற்றாத்தன்மைக்கருமருந்துரைத்தலுங்
காவன்மிகுதலொடுகாமமிகலுரைத்தலுங்
கனவினலிவொடுகவினழிவுரைத்தலு
மாயமுறைபயிலறுமூன் றுமொன் று
மேயவரைவுகடாதலின்விரியே. (ருஅ)

சேடி வினவிய சேவிலிக்குமறைத்தமை ஆடவற்கியம்பல்.

276 பொறுத்துறைவாருட்புகுந்துறைமாயன்புதுமதிமேன்
மறுத்துடைமாலிருஞ்சோலைவெற்பாநின்மடந்தையுணா
வெறுத்துறைகாதலைச்சூழ்ந்தன்னைநாடிவினவலும்யான்
செறுத்துரைவாய்மைக்குவாளாநின்றேகினள்சிந்தையுற்றே. ()

அலரறிவுறுத்தல்.

277 அவ்வயின்வாழ்நித்தர்முத்தரைப்போலவந்தாமத்திப்பா
லெவ்வயினேநும்புகழுமிராகவனெவ்வுள்வெற்பா
கொவ்வையந்தீங்கனிவாய்மடவார்புறங்கூறலென்னும்
கவ்வையந்தீமங்கைகாமவெந்தீயிற்கடிதென்னுமே. (277)

தாயறிவுணர்த்தல்.

278 ஐயானனனிரப்பைத்தவிர்த்தாட்கொண்டவண்ணலென்றே
மெய்யார்புகழ்திருமெய்யத்தெங்கோன்வெற்பின்வேரிமலர்ச்
செய்பாளொடெய்துங்களவியலானநுஞ்செய்கையெல்லா
மெய்யாதவளல்லபெற்றநற்றாயுமிறையவனே. (278)

வெறியச்சுறுத்தல்.

279 செருத்துறவாதவைவேலண்ணலேநின்செயலைபுருக்
கருத்துளராய்த்திருக்காட்கரைமாயன்கனவரைமே
லுருத்துளநோய்வந்தவேதுவுறுதுறைபுய்க்குமையன்
மருத்துவர்போன்றன்னைமார்வெறியாடமகிழ்ந்தனரே. (279)

பிறர்வரைவுணர்த்தல்.

280 கழிபடைத்தாலித்தெழுந்திரைநீரணைகண்டிலங்கை
வழிபடைத்தானைத்தொழுமகிழ்மாறன்வரையிற்செந்தேன்
மொழிபடைத்தாண்முலைப்பூரிப்புஞ்சோதிமுகமுங்கண்டால்
விழிபடைத்தாருள்விரும்பாதவரெவர்வேலவனே. (280)

வரைவெதிர்வுணர்த்தல்.

281 முதுவைப்பெனநின்றநான்மறைவாணர்முழுதிறைஞ்சும்
புதுவைப்புயலெங்கள்செண்டலங்காரன்பொருப்பில்விண்மேல்

விதுவைப்பழித்ததிருமுகமாதைவிரும்பிமன்ற
வதுவைக்கெதிரிலெம்மூரெமர்தாநின்வழிநிற்பரே. (281)

## வரையுநாளுணர்த்தல்.

282 அரிவேடங்கொண்டவரிமேயவிண்ணகராதிவலம்
புரிவேடங்கொண்டகைக்கார்வரைமான்முகம்போன்றதிங்கட்
பரிவேடங்கொண்டதுமன்னுபசும்பொன்பரந்ததென்னச்
சொரிவேடங்கொண்டதுவேங்கைநுண்டாதொடுந்தூமலரே. ()

## தலைமகளறிவு தலைமகற்கறிவுறுத்தல்.

283 நடப்போரவணையானறையூர்நம்பிநான்மறைதேர்
திடப்பேறிவுடையார்புகழ்மாயன்சிலம்பின்மின்னே
மடப்பேதையென்பதென்னேமன்னவாதன்னைவாட்டியநின்
னிடப்பேதைமையைமறைத்தியலேத்துவளென்னெடுமே. ()

## குறிபெயர்த்திடுதல்.

284 பொருளேன்புறத்தெளிவார்புகழ்மாயன்புருடைவெற்பா
சுருளேன்புரிகுழற்றேகையுநீயுமிச்சோலைக்கப்பால்
வெருளேதகவிளைப்பாரணுகாதவிழுமணியா
லருளேதயம்பயிலாமமத்தேவிளையாடுகவே. (284)

## பகல்வருவானை யிரவுவருகென்றல்.

285 முன்பகலேநள்ளிரவழைத்தான்பொருண்முற்றக்கற்று
ரன்பகலேனென்றருளத்தியூரருளாளர்வெற்பிற்
பின்பகலேசென்றவெல்லியின்வாயன்றிப்பெய்வளைபா
னன்பகலேவரினண்பாபழிவருநங்குடிக்கே. (285)

## இரவுவருவானைப் பகல்வருகென்றல்.

286 ஊறுங்கடக்கரடக்களியானைநின்றேடைபின்முன்
கூறும்பரமர்பொலிந்துநின்றூர்தென்குருகைவெற்பா
வீறுண்கயற்கண்ணியைத்தினைக்காவல்விதித்தனர்யாஞ்
சேறும்புனத்ததுநின்பொருட்டாமெனத்தேறுகவே, (286)

இருபொழுதினுமிடைவிடாதுவரலேன்றல்.

287 எதிர்போரரக்கன்சிரங்கரமீரைந்திருபதறுத்
துதிர்பேர்ப்பகழிதொடுந்தனுராமனயோத்திவெற்பிற்
கதிர்போற்பகனுமுழுமணியாரங்கலந்தணிந்து
மதிபோன்றிரவுமயில்பொருட்டால்வரன்மன்னவனே. (287)

கோற்றவனுடமேருங்குலனும்
மற்றவன்புகழும் வாய்மையுங்கூறல்.

288 தாய்மயமாய்வந்தபேய்முலைப்பாலைச்சரதத்துண்ணுஞ்
சேய்மயமாம்பரன்செம்பொன்செய்கோயிற்சிலம்பிற்குன்றுத்
தூய்மையுநீர்மையுநின்குலத்தோற்றமுந்தொல்லுலகெண்
வாய்மையுமாசுண்டதாம்வரையாவிடின்மன்னவனே. (288)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

289 பைந்நாகமும்மதநால்வாய்த்தறுகட்பணைத்தபனைக்
கைந்நாகந்தன்னைவிழுங்கிருள்வாய்த்தெண்கடன்முகந்த
மைந்நாண்மணிவண்ணன்செந்தாமரைமலர்மங்கைகொண்கன்
மெய்ந்நாகைவெற்பிலிவள்பொருட்டால்வரல்வேலவனே. (289)

ஆற்றுத்தன்மைக்காற்றக்கூறல்.

290 தூங்குந்துணுக்குற்றெழும்விழுங்கைவளைசோரக்கண்ணீர்
தேங்குங்கிளர்நெடுமூச்செழுப்பாநின்றுதிங்களண்டத்
தோங்கும்பொழிற்றென்னுறையூரன்வெற்பவுணர்வினிலே
நீங்குங்கொடியையுரைந்தென்றுநீதுன்பநீக்குவதே. (290)

காவன்மிகவுரைத்தல்.

291 நீளுண்டுகினிலமாதுடுத்தாலன்னநீடிருள்வாய்க்
காலுங்கரமுங்கருத்துங்கண்ணுவரல்காரிகையாள்
வேலுங்கயற்கண்கள்போற்றுயிலாதுமெய்வேதமொரு
நாலுந்தமிழ்செய்தமாறன்வெற்பாவன்னைநாட்டமுமே. (291)

காமமிகவுரைத்தல்.

292 திருவரைநாண்வயவாளரவாகும்புட்செல்வன்பொற்றேட்
கருவரைமாதவன்கார்வானவெற்பவெங்கன்னியைநின்
பெருவரைமார்பத்தணைத்தருள்காமப்பிணிதனக்கப்
பொருவரைமார்பன்றியுண்டோமருந்துபுகல்வதற்கே. (292)

### கனவுநலிவுரைத்தல்.

293 வினவிற்பானெடுமாலெனவாழ்த்துமெய்வேதங்கண்டு
மனவித்தகத்தமிழ்தேர்மகிழ்மாறன்வசந்தவெற்பா
நனவிற்புணர்ச்சியெனநின்றொடாகுநலத்தைக்கண்கள்
கனவிற்புணர்ச்சியதாக்கநைந்தாளென்னற்காரிகையே. (293)

### கவினழிவுரைத்தல்.

294 உட்கியல்காரணம்யாதுமில்லாதவருண்மையுள்ளத்
தெட்கிடையாயினுநீங்காதாராகவனெவ்வுள்வெற்பா
கட்கினிதாந்திங்களைக்கரும்பாம்புணக்காமர்செவ்வி
மட்கியதாமெனமட்கியதானனம்வாணுதற்கே. (291)

வரைவுகடாதல் முற்றும்.

---

## க௮. ஒருவழித்தணத்தல்.

௫௧. போக்கறிவுறுத்தல்போக்குடன்படாமை
போக்குடன்படுத்தல்போக்குடன்படுதல்
சென்றுழிக்கலங்கறேற்றியிடுத
லெய்துழிநொந்துரைத்திடுதலென்றேழ்வகைத்
துய்திறத்தோதியவொருவழித்தணத்தல். (௫௧)

௬௦. தலைமகன்றன்பதிக்ககற்சிசாற்றலுஞ்
சிலைநுதற்பாங்கிசெலவுவிலக்கலு
நீங்கல்வேண்டலும்பாங்கிவிடுத்தலுங்
கோமகன்செலவினையிகுளைகூறலும்
பூமகணெஞ்சொடுபுலந்துகூறலுஞ்
சேமவேலவனீடலிற்சேயிழை
காமமிக்கழிபடர்கிளவியு
மன்னமென்னடைதுயர்பாங்கியாற்றலு
மன்னவன்வந்தமைமடந்தைக்குணர்த்தலு
நன்னிடைப்பாங்கிநொந்துவினுதலு
மன்னனுநொந்தவடன்றொடுவினுதலு
மணங்கினைப்பாங்கியாற்றுவித்திருந்தமை
யிணங்கக்கூறலுமென்னுமுந்நான்கு
மொருவழித்தணத்தற்குரியவிரியே. (௬௦)

தலைமகன் றன்பதிக்ககற்சி சாற்றல்.

295 இக்காலத்திவ்வுழியீதேகடனென்றிசைத்துணர்த்தத்
தக்காயிவணின்றியான்சடகோபன்றமிழ்க்குருகூர்
புக்காறிமீண்டுவரைநாளளவும்பொலஞ்செய்தொடிக்
கைக்கார்மயிலையகத்திருந்தாற்றல்கடனுனக்கே. (295)

சிலைநுதற்பாங்கி செலவுவிலக்கல்.

296 தேங்கார்கவிவையம்போற்றியமாயன்றென்சேறைவெற்பிற்
கோங்கார்குவிமுலைக்கோதையைநீங்கலுங்கொற்றவனே
யாங்காரியமன்றுநின்னூர்புதந்தயர்ந்தாறிலொரு
பாங்காலுமாற்றப்படாதிவள்காதற்படுதிரையே. (296)

தலைமகன் நீங்கல்வேண்டல்.

297 பிரிக்கப்பொருதென்னுளமணங்கேபிரித்தாலுமெம்மூர்
தரிக்கப்பொருதுமறப்பதெவ்வாறுசதுமுகனால்
விரிக்கப்பொருதபுகழ்மாயன்வெள்ளறைவெற்பிற்றுன்பம்
புரிக்சப்பொருள்கவ்வைநீங்குதற்கேகப்புரிந்தனனே. (297)

பாங்கி விடுத்தல்.

298 யாவதியாவதுவேதம்பாராயதினியதமிழ்ப்
பாவதுவாகப்புணர்குருகூரன்பனிவரைக்கெக்
காவதமாயினுமாகநின்னூர்வைகலுமிவள்பாற்
போவதுமீள்வதுமாயருள்கூரபுரவலனே. (298)

கோமகன்செலவினை யிகுளைகூறல்.

299 மேகத்தினைவென்றபூங்குழலாயொல்லைமீள்குவமென்
றேகத்துணிந்ததெனக்குரைத்தாரிவ்வுலகிலின்ப
மோகத்தினைத்துறந்தார்புகழ்மாயன்முழுமதிதோய்
பூகப்பொழில்புடைசூழ்புலியூர்நம்புரவலரே. (299)

பூமகணெஞ்சொடு புலந்துகூறல்

300 வரியாடராவிற்றுயின்மாயனைப்புகழ்மாறன்வலம்
புரியார்பொருநைத்துறைக்குருகூரன்பொதியவெற்பிற்
றரியாதிவளுயிரெம்மைவிட்டாலென்னுந்தன்மையுற்றும்
பிரியாதவர்பிரிந்தானெஞ்சமேயென்பிதற்றுவதே. (300)

காமமிக்க கழிபடர்கிளவி.

301 நறைமல்கியகொழுங்காவியைப்போனள்ளிரவினும்வள்
ளுறைமல்கியகண்டுயிலாமையன்பர்க்குரைக்கிலநான்
மறைமல்கியகடன்மல்லைப்பிரான்வெற்பில்வண்கமலப்
பொறைமல்குசேவற்சிறையிறைநீங்கிற்புலம்பன்னமே. (301)

அன்னமென்னடைதுயர் பாங்கியாற்றல்.

302 வெள்ளையம்போருகமுத்தங்குறுதுமிளிர்விரலாற்
பிள்ளைவண்டாமலரேகொய்துமாயன்பிரிதிவெற்பிற்
கிள்ளையும்பூவையுங்கேட்டுடன்பாடநங்கேள்வர்கொற்ற
வள்ளையும்பாடிச்சுனையாடுகமெழுவாணுதலே. (302)

மன்னவன்வந்தமை மடந்தைக்குணர்த்தல்.

303 கழைக்கைச்சிலைமதன்றென்றலந்தேர்புறங்காட்டவிண்ணோர்
தழைக்கத்தமிழ்செய்குருகைப்பிரான்சடகோபன்வெற்பிற்
குழைக்கப்புறஞ்செல்கயல்விழியாயண்டகோளவட்ட
மழைக்கப்புறஞ்செல்கொடித்தேரொடுமன்பர்வந்தனரே. (303)

நுண்ணிடைப்பாங்கிநொந்துவினாதல்.

304 புடைபயில்காலுமிடையூறென்றெல்லையிற்போதரிற்கண்
படைபயிலாள்பையுளுற்றகன்றாய்வண்டுபாடச்செந்தேன்
மடைபயில்வாசமகிழலங்காரன்வரையிற்பண்ணா
ணடைபயிலாதிவணெய்தாமைக்கேதுநவிலுகவே. (304)

அண்ணலுநொந்தவடன்னொடும்வினாதல்.

305 விண்மேற்படர்கடைக்காலவெந்தீவெண்ணெருப்பெனலாய்
மண்மேற்சுடவும்பொறுத்ததெவ்வாறுவனசமலர்ப்
பெண்மேலருள்வைத்தபேர்நகரான்வெற்பிற்பேதையர்தாம்
புண்மேற்றிரியுமிழ்நெய்போற்சுடுங்கவ்வைபொற்றொடியே.(305)

அணங்கினைப் பாங்கி யாற்றுவித்திருந்தமைகூறல்.

306 குடந்தையுளாரமுதைப்புகழ்மாறன்றென்குன்றத்தென்சொற்
கடந்தயாசதவள்காமவெந்நோயைக்கவின்கொடுங்கைக்
கிடந்தயர்காலைநின்மாவிகைவாசங்கிளைத்தணுகும்
வடந்தையையாலவடத்திறைத்தாற்றினன்மன்னவனே. (306)

ஒருவழித்தணத்தல் முற்றும்.

## ௯௬. வரைபொருட்பிரிவு.

௬௧. துறவறிவுறுத்தறுறவுடன்படாமை
துறவுடன்படுத்தறுறவுடன்படுதல்
போயுழிக்கலங்கல்வன்பொறைவற்புறுத்தல்
வரும்வழிக்கலங்கல்வந்துழிமகிழ்ச்சியென்
றுரைபெறுமொன்பதுவகைத்தென்றோதுப
வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிவே. (௬௧)

௬௨. பேதைக்கென்பொருட்பிரிவுணர்த்தென்றலுங்
கோதைக்குரைநின்குறிப்புநீயென்றலுந்
தாழேனென்றவன்றணத்தலுஞ்சேடி
யேழைக்கவன்செலவினிதினுணர்த்தலு
மிடுகிடையிறைவன்பிரிவுநினைந்திரங்கலுங்
கொடியசொற்பாங்கிகூறலுந்தலைமகள்
கொடியசொற்கூறலுங்கொற்றவர்மீண்டு
வருவரென்றிகுளைமதிபெறவுணர்த்தலும்
பருவங்கண்டுபைந்தொடிபுலம்பலுஞ்
சேடிவம்பென்றலுந்திருநுதன்மறுத்தலும்
வற்புறுத்தலும்வன்பொறையெதிரழிதலு
மன்னவர்தூதாய்வந்ததிப்பொழுதென
மின்னிடைக்கிகுளைவிருப்பிற்சாற்றலு
மிறைவியாற்றலுமிறையவன்புலம்பலும்
வலவன்றன்னெடுமெழுமுகிற்கணத்தொடுங்
குலமகன்வருத்தங்கொண்டுகூறலும்
வளைமுழங்கலினவர்வரவறிவுறுத்தலுங்
கிளையொடுமதனைக்கிளிமொழிவாழ்த்தலும்
வெற்றிவேலவன்றனைநினைந்தமைவினுதலுங்
கொற்றவன்றுணிநினைந்தமைபின்கூறலுங்
கோற்றொடிதன்னைக்குறிப்பொடுநீங்கா
தாற்றுவித்திருந்தமையாருயிர்ப்பாங்கி
மொழிவதோடிருபான்மேலொருமூன்றும்
புரிவுடைவரைவிடைப்பொருள்வயின்மன்னன்
பிரிவதன்விரிவெனப்பேசினர்புலவர். (௬௨)

### பேதைக் கென்பொருட் பிரிவுணர்த்தென்றல்.

307 மாசயங்கொண்டுகடல்கடைந்தார்மல்லையின்மறையா
மாசையுமென்னுளத்தாசையும்போக்குமருந்தெனவே
மாசயங்கொண்டெதிர்மன்னவரீயும்வரம்பிலவா
மாசையுங்கொண்டிங்குறநீங்குமாறுரைவாணுதலே. (307)

308 சனகன்புதல்விபொருட்டான்மிதிலைத்தனுவளைத்த
வனகன்றலைச்சங்கநாண்மதிவாழ்தனூராமன்வெற்பி
லெனகங்களிக்கவணங்கேழலைவிலைக்கேற்பநின்கைக்
கனகஞ்சொரிதற்கெழுவதைக்கூறுநின்கண்மணிக்கே. (308)

### கோதைக்குரைநின்குறிப்பைநீயென்றல்.

309 ஊழைப்புறங்கண்டவர்புகழ்மாறனுததிச்சங்கந்
தாழைப்பொதும்பர்த்தவழ்குருகூர்ச்சடகோபன்வெற்பா
மாழைக்கருங்கட்குமுதச்செவ்வாய்ப்பிறைவாணுதலாள்
பீழைப்படாவண்ணநீயேயுரைநின்பிரிவினையே. (309)

### தாழேனென்றவன்றணத்தல்.

310 கற்பாய்கடுஞ்சுரங்காலையிற்போய்க்கனகத்திரள்கொண்
டெற்பாட்டினிலிடர்ப்பாடின்றிமீள்வலியலிசைதேர்
பொற்பார்புருடைப்புருடோத்தமனன்புபூண்டவென்பா
னற்பால்வினைநிற்பத்தப்பாதெனதுரைநன்னுதலே. (310)

### சேடி யேழைக் கவன்சேல வினிதினுணர்த்தல்.

311 கன்றால்விளவின்கனிதந்தமால்கடித்தானத்தன்பர்
மின்றாழுடல்வடிவேல்விழியாய்வெஞ்சுரங்கடந்தே
வன்றாடகம்பரித்திண்டோர்கடாவிவரைபொருட்குச்
சென்றாரினியொல்லையிலுளதாநின்றிருமணமே. (311)

### இடுகிடை யிறைவன்பிரிவுநினைந் திரங்கல்.

312 ஈரமில்லாதவில்வேடருலாவுமிருஞ்சுரமெத்
தூரமெவ்வாறன்பர்சென்றனரோதொண்டர்தொண்டர்தம்பால்
வாரம்விடாதபிரான்மகிழ்மாறன்மதித்தமறைச்
சாரமிவ்வாறுவிதித்தெம்மனோரைச்சதித்தனவே. (312)

கோடியசோற் பாங்கிகூறல்.

313 அரங்கத்தமுதினையுட்கொண்டமாறனடியவர்தா
பரங்கற்றவர்புகழ்தென்குருகூரன்பனிவரைவா
யிரங்கத்துணிந்ததென்னீயின்பவாரியுளெய்துதன்பத்
தரங்கத்தினைத்தணிப்பானெம்பிரான்செய்ததண்ணளிக்கே. ()

கோடியசோற் றலைமகள்கூறல்.

314 கன்னலங்காவுங்கழனியுஞ்சூழ்தென்கடிகையில்வாழ்
மன்னனக்காரக்கனியெம்பிரான்றன்மணிவரைவாய்
நன்னலங்காவலர்போனவெந்தீச்சுரநாடியதற்
கின்னலெய்தாதிங்கெனைத்தெருட்டாநிற்பரோழைபரே. (314)

மன்னவர்மீண்டுவருவரென்றுரைத்தல்.

315 மறைத்தழல்வாணர்பரவும்பிரான்மங்கைவாணன்வெற்பர்
பிறைத்தழல்வாளிச்சிலைவேடர்கானிற்பிடியடிக்கீ
ழுறைத்தழல்பாயக்களிறுவிலாழியதனைக்கையா
விறைத்தழல்போக்குதல்கண்டேகுநரல்லரேந்திழையே. (315)

பருவங்கண்டுபைந்தோடிபுலம்பல்.

316 தெளிக்கின்றசெந்தமிழ்த்தென்குருகூரன்சிலம்பின்மைக்கார்
துளிக்கின்றதென்கண்டுளிக்கின்றதாமெனத்தோகையெங்குங்
களிக்கின்றதுன்பமழிக்கின்றவர்வரக்காண்கிலன்போ
யொளிக்கின்றனகுயிலெங்கேயொளிப்பனுருவிலிக்கே. (316)

சேடிவம்பென்றல்.

317 இழுதுற்றவாள்விழியாய்மழைத்தாரையென்றேங்கல்விண்ணோர்
தொழுதுற்றமால்வண்டுவரைப்பெம்மான்வெற்பிற்சோலைவிண்மேன்
முழுதுற்றலாவரலானுழைந்தேகுமுழுமதிமே
லுழுதுற்றதெள்ளமுதத்துளித்தாரையென்றுட்கொள்கவே. ()

318 சீராமவிண்ணகர்மாயனைப்போற்றித்தினமறையோர்
பாராயணஞ்செய்தெழுப்புமுத்தீப்புகைபைந்தொடியா
யாராமமெங்குந்தவழ்போழ்தினின்மெல்லரும்பவிழ்தேன்
காரானதுபெய்வதென்றெவனீயுங்கலுழ்கின்றதே. (318)

திருநுதன் மறுத்தல்.

319 சுழிக்கின்றதண்பொருநைக்குருகூரன்றுடரிவெற்பிற்
றெழிக்கின்றகாரிது காரல்லவேற்சிற்றில்செய்பவர்தாங்
கழிக்கின்றவேய்மூத்தம்வேருகக்கண்முத்தெனமுறத்தாற்
கொழிக்கின்றது மழைமுத்தல்லவோசொல்லுங்கோதையரே. ()

320 தழைத்தாமரையையுவமையுற்றேனன்றித்தண்ணளியாற்
குழைத்தார்முகமெனக்கூறினனேகுருகூரன்றெண்டர்
பிழைத்தாரெனினும்பிழைபொறுப்பான்வெற்பிற்பேதமையான்
மழைத்தாரையன்றென்பதென்மழைத்தாரையைவாணுதலே. ()

வற்புறுத்தல்.

321 கணையாமிணைவிழியாயண்டகோளங்கவிந்தெழுகா
ரிணையாகமின்னியிடிக்கின்றதானிலமேழ்புகழ்நா
கணையார்கடன்மல்லைநங்கேள்வரையுமடுத்திடிக்குந்
துணையாயுணர்விற்கொளுத்தாதிராது துயரத்தையே. (321)

வன்போறையெதிரழிதல்.

322 விண்ணின்றுதேவர்பரவும்பிரான்றிருவெள்வரைவரய்க்
கண்ணின்றுகண்ணகலேமெனப்போனவன்கண்ணர்நன்னட்
டுண்ணின்றகாதலர்க்குப்பிட்டனனென்றுரைத்தவுண்மைப்
பெண்ணின்றடத்திற்பெய்யாமழையேபெய்யும்பெய்வளையே. ()

மன்னவர்தூதாய்வந்ததிப்பொழுதென மின்னிடைக்கிகுளை
விருப்பிற்சாற்றல்.

323 பூலோகமைவர்க்கருள்புரிமாதவன்போற்றுநர்க்குச்
சாலோகமாதியவாய்ந்தருண்மாயன்றங்கால்வரைவா
யாலோலவெண்டிரைமொண்டுண்டுமீள்புயலாடல்வடி
வேலோர்வரவிட்டமெய்த்தூதெனக்குறிமெல்லியலே. (323)

இறைவியாற்றல்.

324 மார்கழிமூவைந்தின்முற்பகல்காறுமறிதிரைநீ
ரார்கலிமேய்ந்தெழுங்கார்பொழிமாரிவண்டார்வகுளத்
தார்புனைமாறன்றமிழ்மலைசார்தருந்தன்மைகண்டாற்
போர்புனைவேலாவணடங்காரென்புலம்புவதே. (324)

325 இனைந்தாகுலமுற்றிரங்கனெஞ்சேமெய்யிரண்டெனவே
வனைந்தானுயிரொன்றினுக்கிறையோனென்னும்வாய்மையினு
னினைந்தானினைவுற்றிவணடையாரல்லர்நீடுதுழாய்
புனைந்தாதரித்தபிரான்புலியூர்நம்புரவலரே. (325)

இறையவண்புலம்பல்.

326 ஆடல்வளைக்குந்திகிரிப்பிரான்றென்னரங்கன்வெற்பிற்
கூடல்வளைப்பவள்கூடாதபோதளிகோடியன்பிற்
பாடல்வளைப்பநறையூர்மலர்க்கண்படிற்றுரைதேர்ந்
தூடல்வளைப்பவுறையூர்வளைக்குநூடல்குழைந்தே. (326)

327 மறைகொண்டவாய்மைத்தமிழ்செய்தமாறன்வலம்புரியூர்
துறைகொண்டதண்பொருநைக்குருகூரன்சுரும்பிலெண்பா
னிறைகொண்டதன்றிப்பொறையொடுதேற்றநன்னீதியெல்லாந்
திறைகொண்டபொன்னைநெஞ்சேயென்றுநாஞ்சென்றுசேர்வதுவே.

வலவனொடுகூறல்.

328 மாற்றார்புறந்தந்துனக்கெனவேதந்தமங்கையைத்தேர்
மேற்றானுடன்கொண்டுபோந்திலையேமனமீண்டதனுற்
போற்றாதுமீண்டதுதேர்ப்பாகமாயன்புருடைவெற்பிற்
கூற்றாமுகின்முந்திலாற்றுதெனதுயிர்க்கோகிலமே. (328)

329 சினவேகவாதியைமாய்த்தருண்மாறன்சிலம்பினிலென்
மனவேகமென்னவுந்தூண்டுபொற்றேர்வலவாகலவா
நனவேகபோகம்பயில்வார்முன்னென்னினயந்தகங்குற்
கனவேகவைத்தகண்ணீர்பொழிவார்தங்கடிநகர்க்கே. (329)

முகிலொடுகூறல்.

330 கரவிற்றயிருண்டுகட்டுண்டமாயன்கரிகிரிக்கென்
புரவிக்கிரியென்னும்பொன்னெடுந்தேர்புயல்காள்புறப்பட்
டிரவிக்கிருப்பிடமான்றேரிடைதட்டுமென்னவொரு
சரவிற்கிடைநின்றசெய்துமிப்போதென்னுந்தாழ்குழற்கே. ()

331 அருந்தாதிடைச்சுரத்தேகலென்றேயடுத்தார்தடுத்த
விருந்தாலிவளொல்லையான்வைகுரீதிவிரைமுகில்காள்
வருந்ததனுமனைப்போதுரைத்தேமங்கைவாணன்வெற்பி
விருந்தாற்றியேதநும்பேர்க்குடியாகுமெழிலிலையே. (331)

332 கன்மாரிதீர்த்தவருண்மாரியென்னுங்கருமுகின்மேற்
சொன்மாரியைச்சொரிதேமகிழ்மாறன் றடரியிற்போய்
மன்மாரியைப்பொழிவீர்மொழிவீர்மங்கைவார்மலைமேற்
பொன்மாரியைப்பொழிவேன்கடுந்தேர்வரும்பொற்பிணையே. ()

வளைமுழங்கலினவர்வரவறிவுறுத்தல்.

333 அரவஞ்செயுங்கொம்பர்க்கோகிலக்காளமடங்கவிண்ணோர்
குரவன்புகழ்குருகூர்ச்சடகோபன்குலகிரிமேற்
கரவிங்ககலவரைபொருட்கேகுநங்காதலர்தேர்
வரவிங்குணர்த்துந்திருவேசிலம்பும்வலம்புரியே. (333)

வலம்புரிவாழ்த்தல்.

334 நறைதோய்வகுளப்பிரான்குருகூரனன்னீர்ப்பொருநைத்
துறைதோய்வலம்புரிபோலென்றும்வாழ்கதுளங்குமிளம்
பிறைபோல்வளைநுதலாயின்பமாகப்பிணித்தநன்ப
மறைபோகவந்தமகிணர்பொற்றேரின்வலம்புரியே. (334)

வெற்றிவேலவன்றனை நினைந்தமை வினுதல்.

335 புள்ளளவுந்தண்டுழாய்புனைகார்மெய்ப்பொருளெனப்பா
ருள்ளளவும்புகழப்புகழ்மாறனுயர்சிலம்ப
கள்ளளவுங்நெய்தலைப்போலவுண்கண்கலுழவுநீ
யெள்ளளவும்மனத்துள்ளாதிகழ்ந்ததென்னேழையையே. (335)

கொற்றவன்றனினைந்தமைபின்கூறல்.

336 அனமாகும்வென்றிக்கொடியுடையானன்பாருயிர்க்கோர்
தனமாகும்வண்குருகூர்ச்சடகோபன்றமிழ்ச்சிலம்பர்
புனமான்விழிபெற்றிளமுலைதாங்கிப்புறத்துலவென்
மனமானதனைமறப்பதெவ்வாறுரைவாணுதலே. (336)

பாங்கிதலைமகளையாற்றுவித்திருந்த(வரு)மைகூறல்.

337 மருத்தேர்வரிவண்டுலாமகிழ்மாறன்வரையினன்னீர்
பெருத்தேர்திகழ்சுனைவால்வளைப்பூசலைப்பேதைதன்புக்
கருத்தேகளைதற்பொருட்டாகநண்பநின்காமர்செம்பொற்
றிருத்தேர்வலம்புரிநாதமென்றூற்றினன்றேற்றினனே. (337)

வரைபொருட்பிரிவு முற்றும்.

களவியன் முற்றும்.

---

# வரைவியல்.

௯௩. வரைவெனப்படுவதுபுரைதீர்கிழவோ
னுரைமலிகற்பினுத்தமக்கிழத்தியைத்
தந்தைதாய்மாதுலன்றம்முன்றமரொடு
முந்தியவாசான்முதலோர்கொடுப்பக்
கரணம்வழுவாதுகடியமைந்துகொளலே. (௧)

௯௪. கொண்டுதலைக்கழிந்தழிக்கொடுப்போரின்றியுங்
கரணமுண்டெனக்கழறினர்புலவர். (௨)

௯௫. ஆண்டுவரையாதாண்டகையவளொடு
மீண்டுவரைதலுமேலதன்மேற்றே. (௩)

௯௬. ஆராய்ந்தாதியினமைத்தவிக்கரணங்
காராளர்க்காங்காலமுமுளவே. (௪)

௯௭. மேலோர்கரணமுங்கீழோர்கரணமு
நூலோர்ந்துரைத்தநுண்ணியமார்க்கம்
வேற்றுமைப்படவிதித்தனர்பொய்யும்வழுவுந்
தோற்றியபின்னர்த்துறவுடையோரே. (௫)

[வரைவிற்குரிய கிளவித்தொகை.]

௯௮. கிளந்தவரைவிற்குரியகிளவித்தொகை
யுளம்பயில்வரைவுமலிவறத்தொடுநிலை
யாயிரண்டென்பவறிவுடையோரே. (௬)

## ௧. வரைவுமலிவு.

௯௯. வரைவுமலிவின்வகையினையுணர்த்தின்
வரைவுமுயல்வொடுவரைவெதிர்வுணர்த்தலும்
வரைவறிந்துவத்தல்வாழ்த்தல்கண்டுவத்தலோ
டீரிரண்டெனநிகழ்த்தியற்கையவாகும். (௭)

௭0. முலைவிலைவிடுத்தமைமுகிழ்நகைக்கிளை
யுலைவின்றுணர்த்தலுமொண்ணுதனற்று
யுள்ளமகிழ்ச்சியுள்ளலும்பாங்கி
தமர்வரைவெதிர்வொனத்தையற்குணர்த்தலு
முவகையாற்றுதனத்தொடுகிளத்தலு
மிறைவனையிகுளைவாழ்த்தலுமிறைவி

கடவுளைப்பாரிலைகாட்டலுங்கண்டோ
னுரைபெறமகிழ்தலோடொன்றியவேழும்
வரைவுமலிதற்குவாய்ந்தவிரியே. (அ)

முலைவிலைவிடுத்தமை முகிழ்நகைக்குணர்த்தல்.

338 துளபத்தனத்தமிருபதின்மேன்முடிச்சோதிதொடுத்
துளபத்தனைவென்றகார்துவரேசன்சுரும்புறைநின்
களபத்தனத்தைவிலைகொள்வதாகக்கடங்கவிழ்கைக்
களபத்தனத்தைச்சொரிந்தார்பிரிந்தநங்காவலரே. (1)

ஒண்ணுதல் நற்றுயுள்ளமகிழ்ச்சி யுள்ளல்.

339 சிறைவாரிதிநள்ளிடைமீந்திப்பொன்விளைதீவிற்செம்பொன்
குறைவானதின்றிக்கொண்டாரினென்றுங்குருகூரன்வெற்பின்
மறைவானதுன்பம்புறங்காண்பவர்தம்மணவணிகாண்
பிறைவாணுதலன்னையுள்ளத்துள்ளாயெழும்பேரின்பமே. (2)

பாங்கி தமர்வரைவெதிர்வரேனத் தலைவிக்குணர்த்தல்.

340 விதிபெற்றநான்மறையைத்தமிழாக்கியவீரன்விண்மேற்
பதிபெற்றமாறன்வழுதிநன்னாடர்பண்பார்பொருநை
நதிபெற்றவெற்பில்வரைவெதிராநன்னுதானமரா
மதிபெற்றவாலறைவிப்பார்நகருண்மணமுரசே. (3)

தலைமகள் உவகையாற்று துளத்தோடுகிளத்தல்.

341 மறங்காதலித்ததிகிரிப்பிரானைவழுத்தியொண்கண்
ணுறங்காத்திருப்புளிக்கீழுறைமாறனுயர்வரையில்
லறங்காவலர்வரைவென்புதொராயுதத்தான்மனனே
புறங்காண்குவமயலார்புறங்கூறும்வன்பூசலையே. (4)

இறைவனை யிகுளைவாழ்த்தல்.

342 திருவுடையார்தில்லைச்சித்திரகூடச்சிலம்பிற்செவ்வேள்
பொருவுடையாயுனைப்போலென்றும்வாழிபொனங்கொடிபோன்
றுருவுடையாட்கண்டுமுல்லையம்பாணமொளித்திடமீ
மருவுடைக்கூந்தளமுகின்மேற்புனைமுல்லைமாலிகையே. (5)

இறைவி கடவுளைப்பராநிலைகாட்டல்.

343 கணம்பொருட்பான்மைபயிலாதபோதற்றகாட்சியர்முற்
குணம்பொருட்டாகவுட்கொண்டருள்கார்கோவலூரன்வெற்பா
மணம்பொருட்டாகவணங்கைப்பராவிமடமயிலின்
னணம்பொருட்பாடலுரைப்பதுங்கேட்டின்னருள்செய்கவே.

தலைமகள் அணங்கைப்பராநிலைகண்டோன் உரைபெறமகிழ்தல்.

344 வேதாவுணர்தற்கரிதாம்வெகுவிதவேதநுட்ப
மோதாதுணர்ந்துதமிழ்செய்தமாறனுயர்வரைப்பூந்
தாதார்குழலியணங்கைப்பராவுஞ்சரிதையிவள்
மூதாதைதாதையுங்கண்டாற்றுதிக்குமுறைமைபவே. (7)

வரைவுமலிவு முற்றும்.

---

## ௨. அறத்தொடுநிலை.

௭௧. முன்னுரைமுன்னிலைமுன்னிலைப்புறமொழி
யன்னவிருவகைத்தாமறத்தொடுநிலை, (௬)

[௧. தலைவி அறத்தொடுநிற்றல்.]

௭௨. கலுழ்தலிற்பாங்கிகண்ணீர்துடைத்தலுங்
கலுழ்தற்காரணங்கூறலுங்கடவுளைச்
சூளுற்றுரைத்ததைத்துணிந்தமைசொலலு
மிகந்தமையியம்பலுமியற்பழித்துரைத்தலு
மியற்படமொழிதலுமிறைவன்பொறைகொளச்
செல்குவமென்றலுஞ்சிறைபயிலில்வயிற்
செறித்தமைசெப்பலுஞ்செவிலியிறைவனைக்
கண்டமைகூறலொடுகருதியவொன்பது
மொண்டொடியறத்தொடுநிலைதனக்குரிய. (௧௦)

கலுழ்தலிற் பாங்கி கண்ணீர்துடைத்தல்.

345 தேனலந்தோய்தண்டுழாய்மாயன்சேறைச்சிலம்பில்வன்சூர்
மான்மதவாடைக்கணுகினவோவன்னைமாரினிநீ
ரேனலங்காவற்கவணியங்காதிருமென்றனரோ
பானலுண்கண்பையுட்கண்ணீர்சொரிவதென்னைபைந்தொடியே. (8)

தலைமகள் கலுழ்தற்காரணங் கூறல்.

346 மாயாபுரியைக்கடந்தார்புகழ்மகிழ்மாறன்வெற்பிற்
பாயாதவேங்கைநறுநிழல்வாய்மென்பணைமூலைமேற்
றேயாநலந்தந்தகன்றுரைக்காட்டென்றுசொல்லிமம்மர்
நோயாயழாநின்றதுண்கண்ணென்னருயிர் நுண்ணிடையே. (9)

சூளுற்றுரைத்ததைத் துணிந்தமைசொல்லல்.

347 மாறுமுகத்தரைவென்றருண்மாறன்வரையிற்செந்தே
னூறுமுகத்தரவிந்தமின்னேயுறுஞ்சூர்முகத்தே
சீறுமுகத்தினனானுஞ்சூர்முகச்சேயினர்பா
லாறுமுகத்தினன்சேயெனச்சூள்பொய்த்தகன்றனரே. (10)

348 மனத்தாற்பவித்திரநாவானினைந்துவழுத்தியங்கை
யினத்தால்வணங்கியணங்கினைச்சூளுற்றதின்புறுமா
னனத்தாய்நயத்தியகலேமெனமெய்த்தயர்ந்தனர்சந்
தனத்தாபாவண்பரிசாரமாயன்றமிழ்வெற்பரே. (11)

தலைமகன் இகந்தமை தலைமகள் பாங்கிக்கியம்பல்.

349 வாளுற்றகண்மடவாய்வல்லவாழ்வருமாயன்கஞ்சத்
தாளுற்றதண்டுளபத்திருமார்பனணிவரைச்செவ்
வேளுற்றதாள்பற்றிநிற்பிரியேமென்னமெய்ம்மையதாய்ச்
சூளுற்றதையுமறந்திறந்தாரென்கொல்சொல்லுவதே. (12)

பாங்கி யியற்பழித்துரைத்தல்.

350 வான்றூழ்பொழிற்குருகூர்த்தமிழ்மாறன்வரியளிபூந்
தேன்றுதைந்ததிருமகிழ்மார்பன்சிலம்பினிற்சேய்
நோன்றாளிணைதொட்டசூண்மறந்தார்மதிநுட்பம்பெற்ற
சான்றாண்மைநன்றவர்தண்ணளிசாலத்தகவுடைத்தே. (13)

தலைமகள் இயற்படமொழிதல்.

351 சினைவார்துறைக்கண்ணுயிர்த்தாமையுய்க்திடச்சிந்தித்தந்தண்
சுனைவாழ்துறைவர்திகிரிப்பிரான்வண்டுவரைமின்னே
வினைவாயகன்றறச்சேய்த்தாகியுமென்விரகவிடாய்
நினைவாரெனக்கந்நினைவேகலவிநிகர்தருமே. (14)

352 தரையாதரிக்குந்தமிழ்க்குருகூர்ச்சடகோபனன்னீர்த்
திரையார்பொருநைவழுதிநன்னாட்டன்பர்சேயரிக்கண்
வரையார்முலைமடவாயொருகாலுமதித்தொருபொய்
யுரையாருரைத்திடின்மெய்யெவர்பாற்சென்றுறைவதுவே. (15)

இறைவன் பொறைகோள வேய்துவமேன்றல்.

353 அகழ்ந்தாரைத்தாங்குநிலம்போற்பொறைபுரிந்தன்பரெம்மை
யிகழ்ந்தாரெனநின்னிகழ்ந்ததைக்காட்டலென்றேயிறைமேற்
புகழ்ந்தாதரித்தற்கெழுகம்வெஃகாவுட்புயலெனவே
திகழ்ந்தாரணர்சொன்னவண்ணஞ்செய்தார்வெற்பிற்றேமொழியே. ()

சிறைபயிலில்வயிற் செறித்தமைகூறல்.

354 கற்செறித்தாழ்கடலைக்கடந்தார்கண்டியூரர்செய்யுட்
சொற்செறித்தாரிடர்தீர்த்தருள்வார்வெற்பர்சூழ்ந்தனராய்
முற்செறித்தார்வினமற்றுரைமாதர்மொழியலர்கேட்
டிற்செறித்தாரன்னைமாரணங்கேசெயலென்னினியே. (17)

சேவிலி யிறைவனைக்கண்டமைகூறல்.

355 மண்டார்கலிவையம்போற்றியமாயன்வடமலைமேற்
புண்டாழ்சுடர்வடிவேல்வலனேந்திப்புதையிருள்வாய்த்
தண்டாமரைமுகைபோன்முலையாய்நந்தலைவர்வரக்
கண்டாணமதன்னைசெவ்வேளெனவுங்கருதினளே. (18)

[தலைவி யறத்தொடுநிற்றல் முற்றும்.]

[உ. பாங்கி யறத்தொடுநிற்றல்.]

எஙு. சாரிகைவேற்றுமைக்காரணம்வினவினும்
வேரிகொள்வெறிவிலக்கியவழிவினவினும்
போதொடுபுனல்களிறென்றிவையேதுவி
ஞதரப்பாங்கியறத்தொடுநிற்கும். (கக)

எசா. அயலவர்மணமுரசாயிடைவிலக்கலுங்
கயல்விழிப்பாங்கிகடனெனமொழிப. (கஉ)

செவிலி காரிகைவேற்றுமைக்காரணம் வினுதல்.

356 கோலாகலப்புலமைக்குருகூர்ச்சடகோபன்வெற்பில்
வாலாதவனெனத்தக்கசெம்மேனிவனப்பழித்தே
மேலாயதுபொற்பசலைநன்பால்புனம்விட்டவன்றே
யாலாலமென்பளிவளுற்றசோகமறிவரிதே. (19)

வெறிவிலக்குவித்தல்.

357 விச்சைத்தனக்குருகூர்மாறன்வெற்பினில்வெற்பளித்தாள்
பச்சைத்தனத்தின்னமுதுண்டநீயெங்கள்பாலனுள்ளத்
திச்சைத்தனநின்குறையென்பதாய்ப்பலியெய்துவது
கொச்சைத்தனமென்பாலணங்கேநின்குறிப்புநன்றே. (20)

358 பேரையாதிபன்வில்லிபுத்தூர்வந்தபெண்ணரசின்
பேரையாதரிக்குந்திருமால்வெற்பர்பீடுடைநன்
பேரையாதமின்காமவன்பேயைப்பிடாரென்னும்
பேரையாதொழிப்பார்வெறிவேலனும்பேயனன்றே. (21)

வெறிவிலக்கியவழிச் செவிலி பாங்கியைவினுதல்.

359 சுழித்திரைக்கின்றதிரைக்கையினுற்றுறைதோறுமுத்தங்
கொழித்திரைக்கும்பொருநைக்குருகூர்ச்சடகோபன்வெற்பிற்
றெழித்திரைக்கின்றகடற்பார்புகழுஞ்செவ்வேளையிங்நன்
பழித்துரைக்கின்றதென்னேபிறைவாணுதற்பைந்தொடியே. ()

பூத்தருபுணர்ச்சியா லறத்தோடுநிற்றல்.

360 நாத்தான்களித்திவ்வுலகுயிர்போற்றநயந்துணின்று
காத்தான்கடிகைச்சிலம்பிலக்காரக்கனிவரைமே
லேத்தானையகண்ணுள்வண்டலாயத்தொரேந்தல்செங்கைப்
பூத்தானம்பெற்றனளாலன்னைமீரென்புகல்கின்றதே. (23)

புனறருபுணர்ச்சியா லறத்தோடுநிற்றல்.

361 கயந்தனைத்தோயக்கயந்தனைக்காய்ந்தகருணையினுற்
சயந்தனைத்தோய்ந்ததண்காநெடுமாயன்றடங்கிரிமேற்
பயந்தனைத்தோய்ந்தபயந்தணித்தான்செய்பயந்தனக்கவ்
வியந்தனைத்தோய்ந்தன்னைமீரெவனோவெறிவேண்டியதே. (24)

களிறுதருபுணர்ச்சியா லறத்தோடுநிற்றல்.

362 சூற்கொண்டகாளப்புயன்முகத்தாயதுண்டப்பிறைமின்
மேற்கொண்டதாமெனப்பொன்னையன்னேயொருவேழமருப்
பாற்கொண்டகாலைத்தடுத்தணைத்தானன்றமுதினைத்தாம்
பாற்கொண்டமாயன்வடமலைமேலொருபார்த்திபனே. (25)

363 பார்துதிக்கைச்செம்மல்பாண்டவர்தூதன்பாந்தசொர்க்கத்
தார்துதிக்கைத்திருப்பாடகத்தான்வெற்பிலாடன்மதக்
கார்துதிக்கைக்கொண்டதைமீட்டவன்றந்தகாவல்செவ்வேள்
பேர்துதிக்கைக்குவிடுமோசொலுமடப்பேதையரே. (26)

களிற்றிடையுதவியா லறத்தோடுநின்று மணமுரசுவிலக்கல்.

364 கொந்தார்துளபக்குருங்கேசன்வெற்பினிற்கோதையைச்சார்
மந்தாநிலங்குன்றவாடையைவீசமருப்பிற்கொண்ட
தந்தாவளக்கொண்டலைக்காய்ந்திவளுயிர்தந்தவற்கோ
வெந்தாய்மணமுரசங்கோடைபோனின்றிடிக்கின்றதே. (27)

[பாங்கி யறத்தோடுநிலை முற்றும்.]

[ரு. செவிலி யறத்தொடுநிற்றல்]

எடு. மெல்லியல்வேற்றுமைகண்டுதாய்வினவுழித்
தொல்லியல்புணர்ந்ததொன்மைசால்செவிலி
மூன்னிலைமொழியான்மொழிதற்குரியள். (கூ)

தலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய் வேற்றுமைவினதல்.

365 பொறிகள்கண்டாற்குறைபற்றபொற்பாவையைப்போற்புலன்சேர்
நெறிகள்கண்டார்நினைவற்றதல்லாவுண்மைஞானமுன்னூற்
குறிகள்கண்டார்புகழ்வண்குருகூரன்குலவரைமான்
மறிகள்கண்டாலன்னகண்ணிபொன்மேனியென்வாடியதே. (28)

366 போற்றுமைக்காகம்புரந்தான்புகழ்ந்திடப்பொன்னியுள்ளாய்த்
தோற்றுமைக்காரைப்புகழ்மகிழ்மாறன்றடசியின்மான்
சேற்றுமைக்காவிவிழியுஞ்செம்மேனியுஞ்செவ்விகுன்றி
வேற்றுமைக்கோலம்பயின்றதின்கேதுவாமெல்லியலே. (29)

## செவிலி நற்றாய்க்கு முன்னிலைமொழியா னறத்தோடுநிற்றல்.

367 சுரும்புண்டுணர்க்குழலாய்மகிழ்மாறன் றடரியில்யாம்
விரும்புந்தினைப்புனங்காவல்செய்நாளொருவேழம்வந்து
திரும்பும்படியுளதோவென் றுநாடியொர்செம்மல்கொங்கை
யரும்பும்பருவத்தணங்கைத்தன்மார்பத்தணைந்தனனே. (30)

[செவிலியறத்தோடுநிற்றல் முற்றும்.]

## [௬. நற்றாய் தமருக் கறத்தொடுநிற்றல்.]

எசு. நற்றமர்க்கவ்வுழிநற்றாயறத்தொடு
நிற்றலுமுளதெனநிகழ்த்தினர்புலவர். (கசு)

368 ஒல்காக்குலனுங்கிளையுங்குன்றாதவொழுக்குமொண்மை
யல்காத்திருவு முருவுங்கண்டாலன்பரானவர்நோய்
வெல்காவிரித்தென்னரங்கேசன்வெற்பில்விளங்கெமர்நீர்
நல்காதரவுசெய்வீர்புன லூரற்குநங்கையையே. (31)

[நற்றாய் தமருக் கறத்தோடுநிற்றல் முற்றும்].

எஎ. இன்னணமியம்பியவெல்லாங்களவியன்
மன்னிவெளிப்படாவளமைத்தாகலி
னறத்தொடுநிற்றலதன்வகைவிரியே. (கரு)

அறத்தோடுநிலைவகை முற்றும்.

---

## களவுவெளிப்படற்குரிய கிளவித்தொகை.

எஅ. மிகைபயில்களவுவெளிப்படற்குரிய
தொகைபயில்கிளவித்தொகையொருநான்கவை
விரைந்துடன்போகல்வரைந்தவண்கோடல்
கற்பொடுபுணர்ந்தகவ்வைமீட்சியெனப்
பொற்புடைநாவலர்புணர்த்தமைத்தனரே. (கஅ)

## க. உடன்போக்கு.

எகூ. உடன்போக்குணர்த்தலுரவோன்மறுத்தல்
பிரிவுடன்படுத்தல்பிரிவுடன்படுதல்
போக்கல்விலக்கல்புகழ்தறேற்றலென
வாக்கமர்போக்கின்வகைநாலிரண்டே. (கஎ)

அ௦. உரவோற்கிளையுடன்போக்குணர்த்த
லுரவோன்மறுத்தலவளுடன்படுத்த
லுரவோனுடன்படலொண்ணுதற்பாங்கி
வாணுதற்குடன்போக்குணர்த்தல்வாணுத
ஞணழிபிரங்கனவைதீர்பாங்கி
பொற்பமர்கற்பின்மேம்பாடுபுகழ்த
லிற்பயிலிறைவியொருப்பட்டெழுதல்
வெய்யசுரத்தியல்விழுமிதிற்கூறல்
கையடைகொடுத்தன்மையிருள்விடுத்த
லருஞ்சுரத்துய்த்தலயர்வறிந்திருத்தன்
மகிழ்ந்தலர்சூட்டிமனமுவந்துரைத்தல்
கண்டோரயிர்த்தல்கடத்திடைவிலக்க
றண்டலைமன்பதியணிந்தமைசாற்றல்
வண்டிமிர்தாரோன்றன்பதியடைந்தமை
யுணர்ந்திடவுரைத்தலொன்பதிற்றிரட்டியும்
புணர்ந்துடன்போகற்குப்பொருந்தியவிரியே. (கஅ)

*முலைவிலையருமை பாங்கி தலைவற்குரைத் துடன்போக்குணர்த்தல்.

369

(32)

உரவோன் மறுத்தல்.

370 வேலைப்பொருவும்விழியாய்முலையிருமேருவொரு
நூலைப்பொருவுநுடங்கிடைதான்மதிநுட்பம்பெற்றே
மாலைப்பரவுமகிழ்மாறன்வெற்பின்மடந்தைபாற்
பாலைப்பாப்பிற்பதிப்பதெவ்வாறுபதாம்புயமே. (33)

---

* இத்துறைக்குத் திருப்பதிக்கோவையுதாரணச்செய்யுள் இங்குள்ள பிரதிகளிற் காணப்படவில்லை. வேறுபிரதிகளிலிருந்து கிடைத்தால் எழுதிக்கொள்ளும்படி இடம் விடப்பட்டிருக்கிறது.

371 சுடராழியங்கைவலத்தார்அ வரைச்சுரும்புறைமா
ணிடாரணங்கெனமேனிகண்டான்கள்ளியீட்டஞ்செய்தே
யடாரழற்கல்லதர்கடப்பான்பொன்னடித்தளிர்பார்
படாதியங்கவணங்கேவராமுன்படைத்திலனே. (34)

பாங்கி தலைமகற் குடன்போக் குடன்படுத்தல்.

372 புண்ணியகோடிப்புயலருளாளனைப்போற்றுமன்பர்க்
கெண்ணியவாறென்றுமின்பமதாந்துன்பமென்பதுபோன்
றுண்ணில்வாசைக்கடலகத்தாளுன்னுடனெழுங்கால்
வெண்ணிலவாம்வெயில்பைந்தடமாங்கடம்வேலவனே. (35)

373 வாவுங்கடும்பரித்தேர்வெயிலோன்வெப்பமண்டழலே
தூவுங்கடும்பரற்பாலைமன்னுசுடர்தோய்ந்தமண்மேற்
றூவும்பதாம்புயத்தார்நின்றநாரணர்தங்குதங்காற்
காவுங்கழனியுமாநின்னொடேகிலெங்காரிகைக்கே. (36)

உரவோனுடன்படல்.

374 திடன்கொண்டசெல்வத்தருமாகடல்வண்சிறுபுலியூ
ரிடன்கொண்டமாதர்வழிப்பகைபரம்வல்லிடும்பையர்பாற்
கடன்கொண்டவரைக்கண்டார்நெஞ்சுபோன்றழல்கானந்தன்னி
னுடன்கொண்டுசேறற்கொருப்பட்டதாலென்னுளமென்பதே. ()

பாங்கி தலைவிக் குடன்போக்குணர்த்தல்.

375 நாவற்கனிபுரைமேனிப்பிரானறையூரன்வெற்பிற்
காவற்றினையுண்டியுண்டதல்லாற்கட்புலங்கதுவாக்
கூவற்றினையுண்டியுண்டிலளோவென்றுகூறினன்செஞ்
சேவற்கொடியுடையானனையானின்பத்தேமொழியே. (38)

316 வரம்பார்வரிவளையூர்வல்லவாழப்பன்மால்வரைவாய்
நிரம்பாமழலைமொழிமடவாள்பணித்திலறூ
புரம்படகஞ்செறிநின்னடிப்போதுபுயல்பொழியா
முரம்பார்சுரஞ்செல்வதெவ்வாறெனவுமொழிந்தனரே. (39)

## வாணுதல் நாணழிபிரங்கல்.

377 அயனிலவார்சடையானமரேசனருள்கெனமேல்
வியனிலவாழ்வருள்வேங்கடவாணன்றன்வெற்பின்மின்னே
சயனிலவாநின்றநாணிலவாந்தனுச்சார்பவர்க்கோர்
பயனிலவாமென்னவேலைவளாகம்பழித்திடுமே. (40)

378 பூணுந்துளபப்பிரான்புளியூரான்பொருப்பிலெம்மைப்
பேணுங்கொழுநர்பிரிந்தவர்நாள்களிற்பிழையதா
யூணுந்துயிலுந்துறந்ததல்லாலுடன்போதருநா
ணுணுந்துறக்குமிப்பெண்பிறப்பேமிகநன்றுநன்றே. (41)

## பொற்பமர்கற்பின்மேம்பாடு புகழ்தல்.

379 ஆம்பான்மையகற்ற நூன்மறந்தாலுமருமறையோர்
தாம்பார்புகழொழுக்கந்தவறாதுயர்சால்பெனவே
தீம்பாற்கடல்கடைந்தார்திருமூழிச்சிலம்பிற்கற்பின்
மேம்பாடுநீயெய்தநாணழிந்தாலும்விழுமியதே. (42)

380 உயிரிற்சிறந்தது நாணந்நாணினுமுண்மையதாய்ச்
செயிரற்றகற்புச்சிறந்ததென்றுற்றிகழ்வாளரவத்
துயில்பெற்றமாயனலங்காரன்மாலிருஞ்சோலைவெற்பின்
மயில்பெற்றசாயன்மின்னேயுணராதென்வருந்துவதே. (43)

## இற்பயிலிறைவி யொருப்பட்டெழுதல்.

381 தனைக்கணியார்க்கிரங்குஞ்சடகோபன்றமிழ்மலைநம்
மனைக்கணியாரலர்மாயாதிராதினிவான்புனத்தவ்
வினைக்கணியாரலர்மாய்ந்ததுபோல்விட்டுநீங்கிநெஞ்சே
யெனைக்கணியாரெவரேயுடன்போவதினிதெனக்கே. (44)

## சுரத்தியல்புரைத்துழித் தலைமகள்சொல்லல்.

382 பாவலர்காவலனுங்குருகூர்நம்பராங்குசன்றே
மாவலர்மால்வரைப்பேரின்பமாகமணம்பயினங்
காவலரென்னைப்பொதிந்தெழுகாலைக்கடுஞ்சுரத்தா
லேவலர்வாள்விழிபாய்துன்பமேதெனக்கெய்துவதே. (45)

பாங்கி யடைக்கலங்கொடுத்தல்.

383 அடைக்கலந்தன்னி லுடனுண்கணீயென் றழலவிதந்
தடைக்கலங்காரத்த னுமனையாளலங்காரர்வெற்பா
வடைக்கலந்தந் து மணமலிநாட் குமணங்கையின் றிங்
கடைக்கலந்தந்த தடைக்கலமாகவருள்செய்கவே. (46)

384 மன்னு நினையின் றியேயமையாதிவண்மன் னுயிர்யாய்
தன்னருயிருமிவளின் றியேதரியா து மண்மே
னன்னுவலர்புகழ்மாதவனுலிநன் னுட்டெழு நும்
பின்னனதென்னெஞ்சுமிவ்வா றறிந்தென் றும்பேணுகவே. (47)

மையிருள்விடுத்தல்.

385 கொய்போதவிழ்குழன்மங்கையுநீயுங்கொடுஞ்சுரநின்
மெய்போலதனிழல்போற்கடந்தேசெல்கமேய்ந்தெழுசூன்
மைபோனிழல்வண்ணர்வில்லிபுத்தூர்மன்னர்மல்லிநன் னுட்
டுய்போழ்தினி லும்மைக்கூடுவல்யா னுமுளமகிழ்ந்தே. (48)

தலைமகன் தலைமகளை யருஞ்சுரத்துய்த்தல்.

386 காமத்தினைமுதலாயவெல்லாம்புறங்கண்டவொண்மைச்
சேமத்தினர்தொழுந்தென்குருகூரன்செழுஞ்சிலம்பிற்
றுமப்புரிகுழலாய்தடம்போற்கடந்தன்னையும்யாம்
யாமத்திடைக்கடப்பானினிதாகவெழுந்தருளே. (49)

அயர்வறிந்திருத்தல்.

387 விரதம்பயில்விற் றுவக்கோட்டுமாதவன்வெற்பில்வெய்யோ
னிரதங்குடகடற்கேவிழும்போதிந்த்ரகோபமென்னப்
பரதம்பரூரும்பசும்பொழிற்சாரற்கப்பாலைவன்கான்
சரதம்படர்தலிருந்திளைப்பா றுவந்தாழ்குழலே. (50)

மகிழ்ந்தலர்சூட்டி மனமுவந்திருத்தல்.

388 கொங்கைக்களபம்விழிக்கஞ்சனங்குழற்கோதையடிக்
கங்கைக்குச்செம்பஞ்சணிவளையாழியமைத் து டைய
நங்கைக்கிருகண்மணிமகிழ்மாறன் றனன்னகர்வாழ்
மங்கைக்கணியத்தவஞ்செய்தவாவென்மலர்க்கைகளே. (51)

### கண்டோரயிர்த்தல்.

389 உருவுந்திருவுங்குலனுமொப்பாருயிரோவியமே
பொருவும்படிக்கொருபொற்புடையார்புலவோர்பரம
குருவும்பானுமெனக்குறிப்பான்சடகோபன்வெற்பே
மருவுஞ்சுரத்தடைந்தார்தம்மையாரென்றுவாழ்த்துவமே. (52)

### கடத்திடைக்கண்டோர் விலக்கல்.

390 வருந்தினைசாலமடந்தையொடேயிருள்வந்ததெம்பால்
விருந்தினையாய்ச்சுரஞ்செல்வதெண்ணுதினிவேலவயாந்
தருந்தினைமாவும்பசுந்தேனுமூனுஞ்சமைந்ததன்பா
லருந்தினையாய்வைகறைச்சேறிமாயனனந்தையிலே. (53)

### கண்டோர் மன்பதியணிமைசாற்றல்.

391 தோடார்குழலியொடேசுரம்போந்ததுணைவவினிக்
காடானதின்றுமுற்றேன்றுவமாறன்கவின்குருகூர்ச்
சேடாவதாரத்திருப்புளிநீழலுஞ்சீவலவன்
வீடாதரித்தன்றமைத்தபொன்மேருவிமானமுமே. (54)

### தலைவன் றன்பதியடைந்தமை தலைவிக்குரைத்தல்.

392 காதூர்கயற்கண்களாற்கண்டுவாழ்ககழிதகநம்
பூதூரதிபன்பதியிதுகாணிதுபொன்வகுளத்
தாதார்திருப்புயத்தான்சடகோபன்றமிழ்க்குருகை
மூதூரிஃதெங்கள்செம்பொன்செய்மாடமுகிணகையே. (55)

உடன்போக்கு முற்றும்.

---

## உ. வரைந்துகோடல்.

அக. கண்டுவந்தெதிர்கொளல்கணித்தனராய்த்தமர்
கொண்டகம்புகுதல்குழீஇயகொள்கையர்
கொடுப்பக்கோடலிற்குறித்ததோர்மூன்றும்
வடுத்தவிர்வனவாய்வரைந்துகொள்வகையே. (கக)

அ௨. குலனெதிர்கோடல்கொண்டகம்புகுதல்
கலனணிந்தனராய்க்கோலங்காண்டல்
கொணர்ந்தழல்சான்ருய்க்கொடுப்பக்கோடன்
மணந்தவரணிதனைக்கண்டோர்மகிழ்தல்
வடமீன்கண்டுமணவறைபுகல்வாழ்த்த
லருமறைச்சடங்கிற்கமைத்ததருப்பையை
மருமலர்த்தாரோன்மனத்துறநகுத
லாங்கதையிறைவிக்கவன்றெளித்துரைத்தல்
பாங்குடைப்பாங்கிகையடைபணிப்பதனெடு
மன்பார்புகழ்தரவரைந்துகோடலின்விரி
யொன்பானுகுமுணர்ந்துணர்த்துகிலே. (௨௦)

## குலனெதிர்கோடல்.

393 கருவேபயில்பிறவிப்பிணிநீத்தன்பர்காமர்முத்திச்
சொருபேபெறவைத்தருள்புரிமால்வண்டுவரைவரைத்
திருவேவருகதிருநெடுமாலொடுஞ்செவ்வியொன்று
முருபேவருகவெமர்மாளிகைதழைத்தோங்குதற்கே. (56)

## கொண்டகம்புகுதல்.

394 வில்விற்செறிந்ததுணைக்கணைபோலமிளிர்புருவம்
புல்லிச்செறிந்தவிணைவிழியார்புண்டரீகமலர்
வல்லிக்கிணங்குந்திருமால்கடன்மல்லைமாநகர்த்தம்
மில்விற்செறித்தனரேந்திழையாளொடுமேந்தலையே. (57)

## கோலங்காண்டல்.

395 ஞாலங்கண்டானைத்திருவுந்திமேற்கண்டநாதனிந்த்ர
நீலங்கண்டாலன்னமேனிப்பிரானின்றவூரனன்பா
சீலங்கண்டாலுமருள்வானறிவுடன்செம்மலையுங்
கோலங்கணடாரொருநாழிகைக்காயிரங்கோலங்களே. (58)

## கொணர்ந்தழல்சான்ருய்க்கொடுப்பக் கோடல்.

396 தொடுத்தாரணத்தமிழ்பாடியமாறன் றுடரிவெற்பில்
வடுத்தானனையகண்ணாள்கரத்தாமரைமன்னன்கைம்மே
லடுத்தார்புனல்பெய்தனல்சான்றதாய்க்கரணத்தினன்பாற்
கொடுத்தார்கொடுத்திடக்கொண்டானவனக்கொடியினையே. (59)

[இவை மூன்றுந் துறைகூறிற்று.]

மணந்தவரணிதனைக் கண்டோர் மகிழ்தல்.

397 பணக்கோலவாளரவிற்றுயில்கூரும்பராபரன்முற்
குணக்கோலமானுருக்கொண்டருண்மாறன்குருகைமன்னு
நிணக்கோலங்கொண்டவைவேல்விழியாளுடனீங்கள்கொண்ட
மணக்கோலங்கண்டகண்போற்களிகூருமெம்மன்னுயிரே. (60)

மணம்புணர்மன்னனும் மங்கையும் வடமீ
னிணங்குபுகண்டதை யிகுளைவாழ்த்தல்.

398 கடமீன்கரடக்களியானைகூறியகண்ணன்வண்மைத்
திடமீனும்வண்டமிழ்தேர்மகிழ்மாறன்றிருநகர்க்காண்
வடமீனங்கன்னிக்குமன்னுமணஞ்செயவாய்ந்தவுண்மைத்
தடமீனராசியிற்பொன்னெனப்தாருகசந்ததமே. (61)

அருமறைச்சடங்கிற்கமைத்ததருப்பையை
மருமலர்த்தாரோன்மனத்துறநகுதல்.

399 *பொற்பிற்குரியதிருவுறைமார்பர்பொலிந்துநின்று
ரற்பிற்குரியதமிழ்செய்தமாறனணிநகர்மான்
வெற்பிற்புடைக்குந்தனவேழமானவிலங்கறுத்தாற்
கற்பிற்குரியவிப்புல்லோதடுத்திடைகாப்பதுவே. (62)

[இது, களவியலுள் ஒல்காப்பெருமைத் தொல்காப்பியனார் 'மூந்நா ளல்லது துணையின்று கழியா' எனவும், 'மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்—துறந்த வொழுக்கங் கிழவோற் கில்லை' எனவும் கூறிய சூத்திரங்கள்நோக்கிக் கற்பியலுள் "அந்தரத் தெழுதிய வெழுத்து மான—வந்த குற்றம் வழிகெட வொழுகலும்" என விதித்த பிராயச்சித்தம்.

குற்றமாவன: பூப்புநிகழுங்காலத்தும் வரையாது களவொழுக்க நிகழ்த்தலும், தீய இராசியின்கண்ணும் தீயநாளின்கண்ணும் தீயபோதினும் கூட்டத்தைத் துறவாது நிகழ்த்தலும் இருவர்க்கும் அடைவே குற்றம்.]

* இச்செய்யுளின் முன்னிரண்டடியும் மாறனலங்காரத்தில்,

"பொற்பிற்குரியதிருமால்கரிசொன்னபோழ்தினிலச்
சொற்பிற்படச்சென்றுதவியமாயன்றுவரையின்வாய்"

என்று காணப்படுகின்றன.

ஆங்கதையிறைவிக் கவன்றெளித்துரைத்தல்.

400 தண்சுடரோன்கந்திருவன்செந்தீயெனச்சாற் றுமவர்க்
கொண்சுடர் நூல்சொல்கரணத்தினுனின்னேயுய்த்தனராய்
வண்புகழ்வாசமகிழலங்காரன்மதிட்குருகூர்ப்
பண்புடையோருகமூன்றைமூன்னாளென்பர்பைந்தொடியே. (63)

[இது, "அல்ல நீர வார்வமோ டளை இச்—சொல்லுறு பொருளின் கண்ணும்" என்னும் கற்பியற்சூத்திரத்தான் வரைந்தகாலத்து மூன்றுநாட் கூட்டமின்மைக்குக் காரணமென்னென்று தலைவிமனத்துள் நிகழும் வருத்தந்தீர வேதஞ்சொல்லுதலுற்றபொருளின்கண்ணுந் தலைவன் விளங்கக்கூறல்.]

பாங்கி கையடைபணித்தல்.

401 மடைசாய்ந்தொழுகும்புதுப்புனல்பாய்ந்தவரால்கமுகந்
தொடைசாய்ந்திடப்புடைபாய்குருகூரன்றுடரியின்மா
னிடைசாய்ந்திடச்செய்தவர்தலைசாய்ந்திடையென்னுமதன்
கடைசாய்ந்திடினுமிகழ்ந்தருளாதருள்காவலனே. (64)

402 மதலைக்கிரங்கிச்செழும்பால்சுரந்தமணிக்கலசத்
திதலைக்கதிர்மென்முலைசாய்ந்திடினுந்திசைமுகனு
முதலைப்பயந்தமுதல்காளமேகந்தென்மோகையில்வாழ்
குதலைக்குயின்மென்மொழியையெள்ளாதருள்கொற்றவனே. ()

வரைந்துகோடல் முற்றும்.

---

௯. கற்பொடுபுணர்ந்த கௌவை.

அரு. கற்பொடுபுணர்ந்தகௌவையின்வகைதாம்
பொற்புறுசெவிலிபுலம்புதலுடனே
நற்றாய்புலம்பலன்மனைமருட்சி
கண்டோரிரக்கங்கடத்திடைச்செவிலிபின்
றேடிச்சேறலொடுதெரிந்ததோரைந்தே. (உக)

1. செவிலிபுலம்பல்.

அச. உரன்பயில்பாங்கியொடுசாயுணர்பின்ன
ரிரங்கலென்போர்க்கெதிரழிந்துமொழிதலுந்
தனுதறிவின்மைதனைநொந்துரைத்தலு
மனுதுவந்தனளாய்த்தெய்வம்வாழ்த்தலும்
புலந்தொடிச்செவிலிபுலம்பற்குரிய. (உஉ)

சேவிலி பாங்கியோடுசாவல்.

403 அறந்தந்தவாய்மைத்திருக்கோவலூர்வருமாயன்வெற்பி
னிறந்தந்தவாள்விழியாளணியூசலுநீள்சுனையு
மறந்தந்தமாதியசலநினையுமறந்தெமையும்
புறந்தந்தொளியிழையாடெவனோதமிபோயினளே. (66)

பாங்கி சேவிலிக்குணர்த்தல்.

404 கைதலைமேல்வைத்துவிண்ணோர்தொழுங்கண்ணன்கண்ணபுரத்
தெய்தலைநாடிக்குறிஞ்சியுற்றாண்முல்லையெய்தியுள்ளார்
வைதலையாதுசெப்பாலையுற்றேமருதத்தொடெண்பா
னெய்தலைத்தந்தொருமன்னன்பின்போயினணேரிழையே (67)

405 மருமலிதாமப்புரிகுழலாளைவரைதற்குண்மைப்
பொருண்மலிவாய்நமர்பற்றாமையிற்பொன்னனையவன்னே
யிருண்மலிநள்ளிரவிற்கொடுபோயினனீறிலின்பத்
தருண்மனுராமன்றலைச்சங்கநாண்மதியத்தண்ணலே. (68)

சேவிலி யிரங்கலேன்போர்க் கேதிரழிந்துமோழிதல்.

406 உளத்தாதரித்தின்னமுதூட்டிபொண்மலர்சூட்டியொண்பொற்
களத்தாரமுத்தவடமணிந்தேடுகொடுங்கையினிற்சீ
தளத்தாமரைக்கண்ணன்வெள்வரைமாயன்றடவரைமேல்
வளர்த்தார்பெறும்பயனீதோசொலுமின்பமங்கையரே. (69)

சேவிலி தனதறிவின்மைத்தன்மைநினைந் துரைத்தல்.

407 மாந்தளிர்மேனியள்வைகுந்தைமாதவன்மால்வரைவாய்க்
காந்தளம்போதுங்குரவுமென்காவியுங்கைத்துணையாற்
றேய்ந்ததுதானென்னல்வன்சுரம்போய்த்தண்டுறைமருதஞ்
சார்ந்துறைவேனென்றதுள்ளாய்நின்றின்றுதளர்நெஞ்சமே. ()

தேய்வம்வாழ்த்தல்.

408 காவியங்கண்டுயிலாமையென்பாற்றந்துகைகடந்த
வோவியமீண்டெடும்மில்வாழ்வுறுமனைநையூறும்பைந்தார்
தூவிநின்றேறிற்பரவுகின்றேனருள்சோலையுநீர்
வாவியுஞ்சூழ்வண்பரிசாரமாயன்வரைத்தெய்வமே. (71)

சேவிலிபுலம்பல் முற்றும்.

## 2. நற்றாய்புலம்பல்.

௮௫. அறனறிசெவிலியறத்தொடுநின்றபின்
சேடிதன்னொடுஞ்சேடியர்தம்மொடு
மயலார்தம்மொடும்பயிலிடந்தன்னொடும்
புரிகுழனற்றாய்புலம்பற்குரியள். (௨௩)

### செவிலி நற்றாய்க் கறத்தொடுநிற்றல்.

409 பொறியார்வரிவண்டுலாமகிழ்மாறன்பொதியவெற்பிற்
சிறியாள்பெரியமுலைவிலைக்காவனதேர்ந்தெமர்பா
னெறியானளிப்பவரைவெதிராமையினீத்தெமையிக்
கறியாதவண்ணல்பின்னேசுரம்போயினளாயிழையே. (72)

410 ஆரயலார்தந்தைதானயல னென்பதன்றியன்னை
மாரயலாரென்பதும்புதிதாக்கிமலர்க்குழலாய்
போரகலாதவைவேலன்பின்னேசுரம்போயினணன்
னீரகலாநின்றவூர்நின்றமால்வெற்பினேரிழையே. (73)

### நற்றாய் பாங்கியொடுபுலம்பல்.

411 அஞ்சுகம்பெற்றவரவணையானரங்கேசன்வெற்பி
லஞ்சுகமன்னையெங்கேயவ்வைமீரென்னுமவ்வுரைகேட்
டஞ்சுகம்பஞ்செயெனையறியாதழல்வன்பாலத்
தஞ்சுகமாதையுடன்போக்கமைத்ததென்னாயிழையே. (74)

### நற்றாய் பாங்கியர்தம்மொடுபுலம்புல்.

412 ஏகம்பயிலுமுயிர்பரகாயத்தியங்குவபோன்
றேகம்பயினும்மையுமகன்றுள்கொல்லருமறையின்
பாகம்பயிலுந்தமிழ்மாறன்வெற்பயற்பாலையினு
மோகம்பயின்றொருகாளைபின்போனவென்மொய்குழலே. (75)

### நற்றாய் அயலார்தம்மொடுபுலம்பல்.

413 பெண்பெற்றிலமென்பதுந்துன்பமாய்ப்பெற்றவர்பிரிந்தாற்
கண்பெற்றவர்வண்டலாடிடங்காண்டொறுங்காமர்செவ்விப்
பண்பெற்றசெந்தமிழ்தேர்மாறன்வெற்பிற்பயின்றநெஞ்சம்
புண்பெற்றிடுமென்பவாற்செடலேதினிப்பூவையரே. (76)

### பயிலிடந்தன்னொடு புலம்பல்.

414 சினையுந்தழையுந்துணரும்பைங்காயுஞ்செழுங்கனியு
முனையிங்ககன்றிலவூசலுள்ளாளிங்கொழிந்ததென்றால்
வனையுந்திருமகிழ்மாறனெங்கோன்வெற்பின்மாமதிமேற்
புனையும்பொழிற்கமுகேயுனக்கேனிப்பொலிவழிவே (77)

**நற்றாய்ப்புலம்பன் முற்றும்.**

---

## 3. நற்றாய்மருட்சி.

௮௪. புரந்தநிமித்தம்போற்றலுஞ்சுடரோ
டிரந்துகொண்டேத்தலுமிரும்பரல்பரந்த
சுரந்தணிவித்தலுந்துடியிடைமென்மைத்
தன்மையுமிளமையுந்தணத்தலிலச்சமு
முன்னியிரங்கலோடொருவகையாறு
மன்னியநற்றாய்மருட்சிக்குரிய. (௨௪)

### நிமித்தம்போற்றல்.

415 வாக்கைப்புரந்தென்னைவாழ்வித்தமாறனைவாழ்த்தலர்தாம்
போக்கைப்பயில்சுரம்போனவென்மாதும்புரவலனு
மாக்கைக்கொருதுன்பமெய்தாதுமீண்டதருளுகினீ
காக்கைக்குலமென்பதுண்மையதாகுங்கருங்கொடியே. (78)

### சுடரோடிரந்துகொண்டேத்தல்.

416 கூரறிவாளர்தொழுஞ்சொக்கநாரணர்கோட்டிவெற்பிற்
காரறியாச்சுரஞ்சென்றவென்பேதைகமலமுகம்
வேரறியாத்தண்ணளியருள்போற்றுதும்வெய்யவநிற்
பேரறிவாளரலரியென்றோதும்பெயர்தகவே. (79)

### சுரந்தணிவித்தல்.

417 கான்மல்குகோதைக்குவண்குருகூரனன்காவணமாம்
வான்மல்குபொங்கர்த்திருப்புளிநீழலின்வாழியரோ
வேன்மல்குவைந்நுதிவெண்பரல்யாவும்வியன்பொருநைத்
தேன்மல்குமல்லிகைமென்முகையாகுகசீறடிக்கே. (80)

நற்றாய் தன்மகண்மென்மைத்தன்மைக் கிரங்கல்.

418 பரமேச்சுரவிண்ணகரெம்பிரான்மலர்பற்றியகை
சிரமேற்கொளவன்பர்போற்றியமால்வெற்பிற்சேயிழையா
ளரமேற்பதித்தன்னகற்சுரஞ்சென்றதெவ்வாறுபரி
புரமேற்புனைகிண்கிணிவீரிடுமலர்ப்பொன்னடியே. (81)

நற்றாய் தலைவியிளமைத்தன்மைக் குளமெலிந்திரங்கல்.

419 முத்திற்புனைந்தகழங்காடலுறும்பர்மொய்கொள்விதா
னத்திற்புனைந்தகவுரியின்வாய்த்தங்கவாங்கதையே
கத்தித்தருகவெனும்பேதையெங்ஙன்கடந்ததன்பர்
பத்திக்கருள்புரிமால்பாடகத்தயற்பாலையையே. (82)

அச்சத்தன்மைக் கச்சமுற் றிரங்கல்.

420 வில்வேடர்வேட்டைக்கொதுங்கியவேழம்விறற்புலியின்
பல்வேடங்கண்டிடித்தேங்கியகாலைப்பரங்கெதமர்தாம்
வல்வேடங்கொண்டுபின்செல்வதென்றேங்குங்கொன்மங்கைகொண்ட
கல்வேடந்தீர்த்தருள்வேங்கடமால்வெற்பிற்காரிகையே. (83)

421 வெட்சியுள்ளார்கவரானிரைமீட்டலைமேற்கொண்டந்தக்
கட்சியுள்ளாக்குங்கரந்தையர்நோக்குங்கடுந்துடிகேட்
டுட்சிதையாநிற்குமேயுயிர்ப்பேடையையோடையன்னப்
புட்சிறையாலணைபுட்குழியான்வெற்பிற்பூங்கொடியே. (84)

நற்றாய்மருட்சி முற்றும்.

---

4. கண்டோரிரங்கல்.

அஎ. ஒண்டொடிதாயுடனுழையரிரங்கக்
கண்டோரிரங்குதல்கண்டோரிரங்கல். (உரு)

422 அருமாமணிபெற்றவர்விலைகோடற்கறிவுடையோர்
வருமாதரவொடுவிற்பதல்லாற்சொன்மணியைவிண்ணோர்
பெருமான்வரப்பெற்றருண்மாறன்வெற்பினிற்பெண்ணெனச்சா
ரொருமாமணியைப்பிறரோகொடுத்தின்புறுமவரே. (85)

423 நித்திலப்பந்தம்மனைகழங்காடலுநீத்துமென்பூங்
கொத்தலர்சோலைக்குருகைப்பிரான்சடகோபன்வெற்பிற்
கைத்தலப்பிள்ளையுங்கிள்ளையும்பூவையுங்கண்ணின்றியே
வைத்துடன்போயதற்காற்றுவரோவன்னைமார்களுமே. (86)

கண்டோரிரக்கம் முற்றும்.

---

5. செவிலிபின்றேடிச்சென்றுமீடல்.

அஅ. நற்றாய்தன்னைத்தேற்றலுங்கற்றறி
முக்கோற்பகவரைமுன்னிவினுதலுந்
தக்கோரேதுச்சால்புறச்சாற்றலு
மெயிற்றியைக்கடத்திடையெதிர்ந்துபுலம்பலு
மொள்ளியகுரவினையெள்ளுபுபுலம்பலுங்
கள்ளியம்புரவுடனுள்ளியுசாவலுஞ்
சுவடுகண்டிரங்கலுந்தோய்ந்துடன்வருவோர்க்
கண்டுகேட்டலுமவர்கருத்துறத்தெளித்தலுங்
காண்டகுபுதல்வியைக்காணுதிடைதலு
மீண்டவள்செல்வனுஞ்செல்வியும்வியனக
ராண்டமைந்தனரெனவாராய்ந்துரைத்தலுங்
கவினுறவிருவருங்கடவுட்பராவலொடு
புவிபுகழ்புலவர்புணர்த்தமுந்நான்குஞ்
செவிலிபின்றேடிச்சென்றுமீள்விரியே. (உசு)

நற்றாய்தன்னைத் தேற்றல்.

424 மருத்திகழ்சோலைவடமதுராபுரிமாதவன்மேற்
பெருத்துளநட்புடைத்தம்முன்னென்பானபெலங்கூர்பெலத்தாற்
றிருத்தியதேசமுமப்பாலுஞ்சென்றுதிருவினையான்
கருத்துறநாடித்தருவனையாகொள்கனங்குழையே. (87)

முக்கோற்பகவரை முன்னிவினுதல்

425 முத்தாரணியொடுமுப்பாலளவிட்டமும்மைச்செங்கோல்
கைத்தாமரைவலத்தேந்தந்தணீர்வரக்கண்டனுண்டோ
மெய்த்தாரணிபுகழ்வேங்கடமால்வெற்பின்மிக்கசெவ்வே
ளொத்தானொருவனுமொத்தாரில்லாதவொருத்தியுமே. (88)

### தக்கோ ரேதுச் சால்புறச்சாற்றல்.

426 எழுத்தாற்சனித்தபதப்பொருளால்வருமின்பங்கல்வி
பழுத்தாதரித்தவர் துய்ப்பதல்லாற்பண்டுகாரணமாய்
முழுத்தாதரித்தவை துய்த்த துண்டோ திருமொழியில்யாம்
வழுத்தாமுதப்பன்வாழ்வெற்பினீயென்கொல்வந்ததுவே. (89)

### எயிற்றியைக் கடத்திடையெதிர்ந்து புலம்பல்.

427 எயிற்றியர்செல்வக்குலக்கொழுந்தேமணியெவ்வுழியுங்
குயிற்றியமாடத்திருக்குருகூர்ச்சடகோபன்வெற்பின்
மயிற்றிரள்வந்தணுகாப்பாற்கானிலென்மஞ்ஞையின்பம்
பயிற்றியவேலனுடன்போனதாரைபகருகவே. (90)

### ஒள்ளியகுரவினை யெள்ளுபுபுலம்பல்.

428 குரவேகவர்ம்பரித்தேரைவர்பாகன்செங்குன்றயலங்
குரவேய்முளிந்தகொடுஞ்சுரத்தேகொற்றவனெடுநல்
குரவேகளையெங்குலக்கொடியேகக்கொம்பேற்றங்கொண்டுங்
குரவேதடுத்திலைதாபரமாகுங்கொடியையன்றே. (91)

### கள்ளியம்புரவுட னுள்ளியுசாவல்.

429 நறவேகமழ்பொழிலுவாய்வருமப்பனங்கிரிப்பற்
றறவேபிரிந்தழற்கான்மதியாதயலோனெனவாழ்
மறவேலவன்பின்னிருளிடைப்போங்கள்ளிவந்தெதிர்ந்தாற்
புறவேதடுத்திலையேகள்ளியோடன்புபூண்டிருந்தே. (92)

### சுவடுகண்டிரங்கல்.

430 கலைமான்சுவடுவைதாமரைகாட்டவன்காற்சுவட்டோ
டலைமான்புணர்தென்னரங்கேசனம்பொற்கிரிக்கயற்கைம்
மலைமான்சுவட்டயல்வேடன் சுவடவைமாமனன்பார்
சிலைமான்சுவடிவையாமிவையாமத்திருவடியே. (93)

431 கடிச்சுவட்டேற்றளிதோய்கடம்பாய்வன்களிறனையா
னடிச்சுவடிங்கிவையாங்கவைதாமரங்கேசன்வெற்பிற்
றொடிச்சுவடேற்றகைத்தாமரைவீசிச்சுரத்துணைபோம்
பிடிச்சுவடாம்பின்பிடித்தெவனோவந்தும்பெற்றதுவே, (94)

432 படர்வேலைஞாலம்புகழ்பார்த்தன்பள்ளிப்பாணைபெண்ணு
ரிடர்வேலையெய்துஞ்சுரத்தெழுமான்பின்பெழுமறவர்
தொடர்வேலைவைத்தசுவடதுதோன்றல்சுவடுதுபோ
ரடர்வேலவன்பின்றொடர்தெய்வயானையடியிதுவே. (95)

தோய்ந்துடன்வருவோர்க்கண்டு கேட்டல்.

433 நடனுகணைக்கண்டுயின்மாயனுங்கையைநாடலர்போற்
கடநாகமத்தியுங்தோலுமதாங்கனற்கானின்முத்த
வடநாகிளமுலைமங்கையும்வேலனும்வாழ்ந்துமைப்போற்
றிடனுகநேர்வரக்கண்டதுண்டாமெனிற்செப்புகவே. (96)

434 இறையுந்திருவுந்திரும்பினராமென்றிறைதனக்கு
மறையும்படிதுணிவேற்கணங்கேநும்வடிவமன்றென்
றறையுந்திறத்துணர்ந்தேனெங்கண்மாலரங்கத்துமைப்போன்
றுறைகின்றவர்சுரத்தெய்தினராகிலுரைசெய்புமே. (97)

கலந்துடன்வருவோர் கருத்துறத்தெளித்தல்.

435 செய்யாளுமாலுந்திருப்பாற்கடலுட்சிறந்தது யில்
பொய்யாதுலகில்வெளிவந்துள்ளார்சுரம்போயிதன்முன்
மெய்யாமெனவும்பர்கோனெம்பிரான்றிருமெய்யத்துள்ளா
யெய்யாதடைந்தணங்கேசெம்பொன்மாளிகையெய்துவரே. (98)

புதல்வியைக் காணுதிடைதல்.

436 படத்திடையேகண்டுயில்பார்த்தசாரதிபார்த்தன்பள்ளித்
தடத்திடைவெற்பினும்பூஞ்சோலையினுநற்றுயர்வைகு
மிடத்தினுமேழையைக்காணுதழுதகண்ணீரமில்லாக்
கடத்தினுங்காணுப்பெருதிரண்டாற்றினைக்கண்டனவே. (99)

மீண்டவள் செல்வனும் செல்வியும் வியனக
ராண்டமைந்தனரேன வாராய்ந்துரைத்தல்.

437 வெற்புடையானும்விரிஞ்சனும்போற் நம்விமலனன்பர்க்
கற்புடையான்மங்கைவாணனெங்கோன்வெற்பிலாயிழைநங்
கற்புடையாளுங்கதிர்வேலனுங்கைகண்டணியசம்
பொற்புடையரன்குருகூர்ச்செம்பொன்மாடம்புகுந்தனரே. (100)

438 வரந்துறந்தார்க்கருள்கூர்மங்கைவாணன்வரையினிலென்
கரந்துறந்தாளும்வைவேற்கடுங்காளையுங்காதனிரந்
தரந்துறந்தாரென்னுமுக்கோற்பகவர்பொற்றாள்பணிந்தே
சுரந்துறந்தாழ்புனலாரடைந்தார்மென்சுரிகுழலே. (101)

கவினுற விருவருங் கடவுட்பராவல்.

439 ஏவற்கடவுளருள்ளாகியதன்றியெவ்வுயிர்க்குங்
காவற்கடவுளெனுமங்கைவாணன்கனவரைவாழ்
சேவற்கொடியுடையோய்நிற்பராவுதுஞ்செல்வனுமென்
பூவற்கமேவுங்குழலாளுமெம்மிற்புகுவதற்கே. (102)

செவிலி பின்றேடிச்சென்று மீட்ன் முற்றும்.

அக. பொற்புடைத்தாகப்புகன்றமூவொன்பதுங்
கற்பொடுபுணர்ந்தகவ்வையின்விரியே. (உஎ)

கற்பொடுபுணர்ந்தகவ்வை முற்றும்.

---

௯. மீட்சி.

கo. உடன்கொடுபோயவுரவோன்றன்மனை
மடந்தையைவரைதல்வரையாதவண்மனை
மீண்டுவரைதன்முன்வேள்விசெய்ததனை
யாண்டகையுணர்த்தெனவறிவுடைப்பாங்கி
பூண்டுணர்த்தினனெனல்பொன்னகரடைந்தபின்
மீண்டவளுடனுறன்மீட்சிநால்வகைத்தே. (உஅ)

கக. இறைவனைப்பயந்தவளெமரில்வரைந்தமை
இறைவிநற்றாயுறவெய்தவனென்றலு
மிறைவியூர்சார்ந்தமையிறைவன்சாற்றலுந்
தலைவிமுன்செல்வோர்தம்மொடுதன்வர
விருளையர்க்குணர்த்திவிடுத்தலுமிருளையர்க்
காங்கவருணர்த்தலும்பாங்கியருணர்ந்து
நற்றாய்க்குணர்த்தலுநற்றாயுணர்ந்தவ
ளுளங்கொளவேலனைவினாதலுமெனவுடன்
விளம்பிருமூன்றாமீட்சியின்விரியே. (உக)

இறைவனைப்பயந்தவ ளேமரில்வரைந்தமை
யிறைவிநற்றாயுற வெய்தவ ணென்றல்.

440 கழுவாமணியையென் கண்மணியேகாரணங்கள்சற்றும்
வழுவாதெமரில்வரைந்தமைநாடிமடந்தைநற்றாய்
தழுவாதரவுறவான்மங்கைவாணன்றடஞ்சிலம்பிற்
கெழுவாயுடன்கொண்டிதுவேமரபிற்கியல்பென்பதே. (103)

இறைவியூர்சார்ந்தமை யிறைவன்சாற்றல்.

441 நீங்காதபாங்கியுஞ்சேனையுநீங்கநியமித்தெம்மில்
யாங்காணத்தெய்வமிடைநின்றுகூட்டியதிப்பொழிலப்
பாங்கார்பதிகுருகூர்மகிழ்மாறன்பைம்பொற்றுடரித்
தேங்காவியுண்கண்மின்னேயெமர்வாழுந்திருநகரே. (104)

தலைவி முன்செல்வோர்தம்மோடு தன்வரல்
பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

442 ஏங்கித்தனித்தெவன்செய்தனரோவென்றிரங்கிநிற்கும்
பாங்கிற்கியாமிங்குமீண்டதெல்லாமறைப்பாடனுட்பந்
தாங்கித்தமிழ்செய்ததென்குருகூரன்றமிழ்மலயத்
தோங்கிப்படர்ந்தந்தணீர்மறவாமலுரைசெய்யுமே. (105)

இகுளையர்க் காங்கவருணர்த்தல்.

443 செழுந்தாமரையன்னவாண்முகத்தீர்விண்ணிற்றேவரெல்லாந்
தொழுந்தாளிணைக்குருகூர்ச்சடகோபன்றுடரிவெற்பிற்
கெழுங்காதலன்பின்வரக்கண்டனநமதின்னுயிராங்
கொழுங்கார்முகிலளகப்பிறைவாணுதற்கோதையையே. (106)

பாங்கியருணர்ந்து நற்றாய்க்குணர்த்தல்.

444 சுரும்பினரோதிமத்தாருழைத்தோன்றச்சுடரினந்தா
மரும்பினசோதித்திருவுருவாமரங்கேசனன்பால்
விரும்பினராயுடன்போனரங்கோதையும்வேலவனுந்
திரும்பினராயெமர்சீறூரனுகினர்தேமொழியே. (107)

நற்றாய் தலைமகனுளங்கோள வேலனைவினுதல்.

445 சுரும்பிமிர்வாசத்திருமகிழ்மாறன் றுடரியிற்கோங்
கரும்பியல்பூண்முலையாளுடன் மீண்டருளண்ணலெங்கள்
கரும்பினையெம்மனைக்கேயுய்க்குமோ தன் கடிமனைக்கே
விரும்பிவாறுய்க்குமோவேலனேயுரைமெய்புரிந்தே. (108)

மீட்சி முற்றும்.

---

[தன்மனை வரைதல்.]

கஉ. கவினுடைநற்றாய்கடிநிகழ்த்தற்குச்
செவிலியைவினுதலுஞ்செவிலிக்கிகுளை
வரைவுநிகழ்ந்தவாய்மையுணர்த்தலும்
புரைதீர்செவிலிபொற்பநற்றாய்க்குத்
திருமணநடந்தசெவ்வியுணர்த்தலு
மிருவருந்தலைவியிற்செலவிறைவன்
யான்வரைந்தமைநுமர்க்கியம்பெனவிகுளை
தானதுமுன்னர்ச்சாற்றியதுணர்த்தலு
மென்னவரன்முறையியம்பியவைந்து
மன்னன் றன்மனைவரைந்ததன்விரியே. (௩௦)

கவினுடை நற்றாய் கடிநிகழ்த்தற்குச் செவிலியை வினுதல்.

446 திணிமாடகத்தொடையாழ்மொழியாய்விண்ணிற்றிங்களைத்தோய்
மணிமாடக்கோயில்வருந்திருமால்வெற்பில்வாணுதற்செம்
மணிமாளிகையில்வதுவைசெய்வீரென் றறைதூர்தெவ்வைத்
தணிமாரதவடிவேற்காளையைப்பெற்றதாயொடுமே. (109)

செவிலிக் கிகுளை வரைவுநிகழ்ந்த வாய்மையுணர்த்தல்.

447 காதரந்தீர்த்தென்னையாட்கொண்டமால்கடிகைச்சிலம்பின்
மாதராவாவுமதிமுகத்தோகையைமன்னன் றன்னூ
ராதரவாகமணம்புணர்ந்தானென்பதன்னையென்பாற்
றூதான்பாயிதுசேப்புனமாமெனச்சொல்லினரே, (110)

வரைந்தமை சேவிலி நற்றாய்க்குணர்த்தல்.

448 விரிந்தாழ்பொருநைத் துறைக்குருகூரன்மெய்வேதமுற்றத்
தெரிந்தாயிரந்தமிழ்செய்தபிரான்வெற்பிற்றேனைக்கொண்டு
பிரிந்தான்றமர்நல்கவேமறையோர்விதிபெற்றிமணம்
புரிந்தானினியிங்கடைவரென்றார்தமர்பொற்றொடியே. (111)

இருவருந் தலைவியிற்சேல விறைவன்
யான்வரைந்தமை நுமர்க்கியம்புக வென்றல்.

449 பாய்மாநடாத்தைவர்தூதுவனுமெனப்பண்டுசென்ற
கோமானையேத்தும்பிரான்சடகோபன்குருகைவெற்பிற்
பூமாதினைவரைந்தென்புனலூருறைபொற்பினைநுந்
தாய்மார்தமக்கணங்கேமறவாதினிச்சாற்றுகவே. (112)

பாங்கி தானதுமுன்னர்ச் சாற்றின னென்றல்.

450 பொன்னாழியங்கைப்பொலிந்துநின்றார்பதம்போற்றும்மண்மே
னன்னாவலர்தம்பிரான்குருகூரனற்றாள்பரவு
மன்னுசெங்கேனின்மணம்புணர்வாய்மைமதித்துணர்த்து
முன்னாதரித்துரைத்தேனன்னைமார்க்குமுழுவதுமே. (113)

௯௩. உரைத்தவற்றினுண்முதலொழிந்தநான்கும்
வரைத்திருமகளைமன்னவனுடன்கொண்டுபோய்
வரைந்துமீளவருதற்குமுரித்தே. (௩௧)

[தன்மனைவரைதல் முற்றும்.]

---

## [உடன்போக்கிடையீடு.]

௯௪. செலவறிவுறுத்தல்வரவறிவுறுத்த
லிடந்தனினீக்கமிரக்கமொடுமீட்சியென்
றுடன்போக்கிடையீடொருநால்வகைத்தே. (௩௨)

௯௫. இன்புறத்தலைமகளிகுளையர்தமக்குத்
தன்செலவுணர்த்திவிடுத்தலுந்தகைசா
னற்றாய்க்குணர்த்திவிடுத்தலுநற்றாய்க்

கந்தணருணர்த்தலுமாயிழைநற்று
யறத்தொடுநிற்றலிற்றமர்பின்சேறலைச்
சிறப்புடைச்சேயிழைசெம்மற்குணர்த்தலுந்
தலைமகன்றலைமகடனைவிடுத்தகறலுந்
தமருடன்செல்பவளவன்புறநோக்கிக்
கவன்றுற்றலுமெனக்கழறுமூவிரண்டு
மீண்டுடன்போக்கிடையீட்டுவிரியே. (௩௩)

இன்புறத்தலைமக ளிகுளையர் தமக்குத்
தன்சேலவுணர்த்திவிடுத்தல்.

451 சாத்தாலரக்கனிருப துதோளைத்தலையுடன்கொய்
வாத்தானைப்போற்றும்பிரான்மகிழ்மாறன்மதிட்குருகூர்க்
காத்தாடல்வேற்களியானைபின்னேகுமென்காட்சியெல்லாஞ்
சுரத்தாற்றிடைச்செல்லுவீர்சொல்லுவீர்துணைத்தோகையர்க்கே.

தலைமகள் தன்சேலவு நற்றாய்க்குணர்த்தி விடுத்தல்.

452 பொன்னைப்புவிமகளைப்புணர்மார்பிற்பொதுவர்குலப்
பின்னைத்திருவைப்புணர்நெடுமாயன்பிரிதியில்வாழ்
மன்னைத்துணைக்கொண்டுபொற்றேரில்யான்செல்லும்வாய்மைபெற்ற
வன்னைக்குவந்தந்தணீர்மறவாமலருள்செய்யுமே. (115)

453 எல்லியிற்காதலன்பின்றொடர்வேனிலிளங்கிளியைப்
புல்லியின்பாலருத்தென்றுரையாததைப்போதமுற்றீர்
வில்லிபுத்தூருறைவார்வெற்பில்வரமென்விழித்துணைக்குஞ்
சொல்லியிப்பான்மல்விகாடுற்றவாய்மையுஞ்சொல்லுகவே. (116)

நற்றாய்க் கந்தணர்மொழிதல்.

454 தெளிக்குந்தமிழ்க்குருகூர்மாறன்செம்பொற்சிலம்பிலொண்மை
யளிக்குநுமதுகுலக்கொழுந்தாம்பொன்னையன்னைகண்ணுற்
களிக்கும்படியொருகாளைபின்னேசெலக்கண்டனங்கார்
துளிக்குந்திவலையறியாக்கவலைச்சுரங்கடந்தே. (117)

ஆயிழைநற்றாயறத்தோடுநிற்றலிற்
றமர்பின்சேறலைத் தலைவற்குணர்த்தல்.

455 வேற்றானைவன்கொடித்தேர்த்தானைவாம்பரிவேழமிரு
பாற்றானையாய்களிடைக்குலவேந்தர்பரசமய
மாற்றானைகட்கொருசிங்கமதாமகிழ்மாறன்வெற்பி
னீற்றானைப்போன்றண்ணலேமருங்கூரினிரைத்தனரே. (118)

தலைமகன் றலைமகடனைவிடுத்தகறல்.

456 வம்பமர்பூண்முலையாய்வருந்தேன்மறவேந்தர்வந்தா
லிம்பரின்மண்ணவராக்குவன்யானுமரேலிகலே
னம்பெருமாள்கிரிபோற்கரிவாம்பரிநண்ணினவேற்
றும்பியுங்கிள்ளையுமாய்ப்பறந்தோடத்துரத்துவனே. (119)

தமருடன் செல்பவ ளவன்புறநோக்கிக் கவன்றுற்றல்.

457 அறங்காட்டியதிருமாலரவிநாடனணிவரைவாய்
மறங்காட்டெமர்வரமன்னன்றிண்டேர்வயமாத்தனது
புறங்காட்டலும்புறங்காட்டினாரலப்புரவிநின்று
நிறங்காட்டுமேற்கறங்காட்டலதாமவர்நெஞ்சமுமே. (120)

[உடன்போக்கிடையீடு முற்றும்].

---

கூரு. தன்னூர்தன்மனைவரைபவைதவிரிடை
மன்னூரனுடைத்தாய்மறையோர்முதல்வரை
முன்னிட்டருங்கலமுறைமுறைவழங்குபு
வரைதற்குரியமாண்புறதென்ப. (கூச)

அவ்வாறு வரைந்துகொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்துகூறல்.

458 விண்ணுதரித்தெழுபாற்கடலான்றிரைமீதுவந்த
பெண்ணாமுதைமணம்புணர்ந்தானென்னும்பெற்றியல்லான்
மண்ணுதரித்தநரரென்பதென்மகிழ்மாறன்வெற்பி
லண்ணாந்தெழுந்தவிணைமுலையாளொடரசனையே. (121)

வரைவியன் முற்றும்.

---

# கற்பியல்.



கூஎ. கற்பெனப்படுவதுகற்பினைவழுவாது
தற்கொண்டானையுந்தன்னையும்பேணி
யில்லறத்தொழுகுமில்லறக்கிழத்தி
நல்லறத்தவர்மதிநன்மாண்பதனொடு
மகிழ்ச்சியுமூடலுமூடலுணர்த்தலு
மிகழ்ச்சியில்பிரிவுடன்பிறவுமியன்ற
புகழ்ச்சியினெய்தியிற்பொருந்துவதாகும். (க)

[கற்பிற்றுரிய கிளவித்தொகை.]

கூஅ. பெருகுமில்வாழ்க்கைபரத்தையிற்பிரிதல்
செருவினுக்குற்றுழிச்செல்வதுடனே
பொருவில்புரத்தலிற்பொருள்வயிற்பிரித
றூதிற்பிரிதல்சுருதிமுதலிய
வோதப்பிரிதலோடோரேழென்ப
கிளந்தகற்பிற்கிளவித்தொகையே. (உ)

## க. இல்வாழ்க்கை.

கூகூ. இறைவன்மகிழ்ச்சியிறைமகண்மகிழ்ச்சி
நிறைபயில்*செவிலிநீதியின்மகிழ்ச்சியென்
றியம்பியநால்வகைத்தில்வாழ்க்கையே. (ங)

௪00. இறைவனிறைவிமுன்பிகுளையைப்புகழ்தலு
மிறைவனையிகுளையின்புற்றுவாழ்த்தலும்
வரையுந்துணையும்வருந்தாதிருந்தமை
யுரையென்றிகுளையொண்ணுதலைவினாதலு
மொண்ணுதலுணர்த்தலுமண்ணலைப்பாங்கி
மடந்தையைவரையுநாளளவுந்திடன்பெற
வாற்றியநிலைமையதனைவினாதலுந்
திருமனைவந்தசெவிலிக்கிகுளை

* 'செவிலிநீதியின்மகிழ்ச்சி' என்பது 'செவிலிசிலதியின்மகிழ்ச்சி' என்று அல்லது 'செவிலிசேடியின்மகிழ்ச்சி' என்று இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

யிருவான்புமெழில்பெறவுணர்த்தலு
நயந்தவில்வாழ்க்கைநன்கியம்பலுநன்னுதற்
பயந்தநற்றாய்க்கவள்சென்றதைப்பகர்தலு
மென்னுமையிரண்டுமில்வாழ்க்கைவிரியே. (௪)

தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தல்.

459 வடியுண்கயற்கணிகுளையின்றாய்விடின்மாதவன்பூங்
கொடியின்புறுபுயல்வண்டமிழ்க்கூடலுட்கோதறுநூல்
படியின்புறச்சொன்னயாழோர்மணமென்படும்பிணைநங்
குடியுங்குலனுமொழுக்குமென்றுமின்சொற்கோகிலமே. (1)

இறைவனை யிகுளை யின்புற்றுவாழ்த்தல்.

460 வீழ்நாள்படாமைவசிட்டனென்பான்வடமீனொடொன்றாய்
வாழ்நாளெனமின்னைவாழ்வித்தநீபுன்மனக்கவலைப்
பாழ்நாளுறாதரங்கேசனைப்போற்றுமெய்ப்பத்தரைப்போ
லூழ்நாடியேவல்செய்வேனையென்றேபுகழ்ந்தோதுவதே. (2)

பாங்கி தலைவியை வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை வினாதல்.

461 இரையுந்திரைத்திருப்பாற்கடனாதனினியவுள்ளங்
கரையும்படிசெந்தமிழ்செய்தமாறன்கனவரைவாய்
நிரையுண்குவளைவிழியாரலரினைநீபெருமான்
வரையுந்துணையும்பொறுத்ததெவ்வாறின்பவாணுதலே. (3)

தலைமகள் வருந்தாதிருந்தகாரணங் கூறல்.

462 கார்தோய்ந்தவார்குழலாய்காரிமாறன்கமழ்வகுளத்
தார்தோய்ந்தமார்பன்வழுதிநன்னாடர்தணந்தளித்த
சூர்தோய்ந்தகாதலெனுமாதவத்தைத்துராந்ததுதண்
ணீர்தோய்ந்தபாதவமாகியிச்சேரிநிகழ்த்தலரே. (4)

பாங்கி தலைவனை வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை வினாதல்.

163 தொத்தார்பொழிற்குருகூர்மகிழ்மாறன்றுடரியில்வான்
முத்தார்மதமலைக்கோடொருதோளுழமுத்தநிரைக்
கொத்தார்முகின்முலைக்கோடொருதோளுழக்கூடியமோ
கத்தாய்வரையுந்துணையுமெவ்வாறிருந்தாற்றியதே. (5)

பாங்கி மணமனைச்சென்றசெவிலிக் கிருவரன்பு முரைத்தல்.

464 ஓராயிரங்கவிபாடியமாறனுயர்குருகூ
ராராவமுதென்பன்பொன்னையன்னேயன்பனங்கவன்பாற்
பேராசைகொண்டவளன்பையிங்கேதென்றுபேசுவன்பார்
சாராதுசீறடிபூவணைக்கேயன்றித்தாழ்குழற்கே. (6)

பாங்கி யில்வாழ்க்கைநன்மை செவிலிக்குரைத்தல்.

465 துறந்தார்க்குந்துப்புரவில்லாதவர்க்குந்துணையெனவில்
லறந்தானிகழ்த்துந்தலைமையினலையாழிமண்மேற்
சிறந்தார்புகழ்திருமால்சிங்கவேள்குன்றிற்சேர்ந்தெமதிற்
பிறந்தாள்பெருமைக்கெவரோநிகரன்னைபேசுகிலே. (7)

மணமனைச்சென்றுவந்த செவிலி தலைமகள்கற்பு நற்றாய்க்குரைத்தல்

466 தற்காத்துத்தற்கொண்டவன்றனைப்பேணித்தகைசிறந்த
சொற்காத்தனணங்கையுமுனைப்போலவித்தொல்புவிமேற்
பொற்காவளந்தந்தபூங்காவளநகர்ப்பூபதிபோ
லிற்காத்துநங்கையைநீங்காதொருகணத்தேந்தலுமே. (8)

செவிலி நற்றாய்க்குத் தலைமகண்மனைவாழ்க்கைத்தன்மை யுணர்த்தல்.

467 முகுந்தனவாவுற்றுநூங்கீர்கடைந்தருண்முக்கியமாய்த்
தகுந்தனம்யாவுந்தமிழ்ச்சடகோபன்றமிழ்நகர்க்குப்
பகுந்தனவாயவைநங்கைதன்னில்லிற்பதிந்துகுடி
புகுந்தனவாந்தன்மைத்தொன்றுமில்வாழ்க்கைபொனங்கொடியே.

செவிலி நற்றாய்க் கிருவர்காதலு மறிவித்தல்.

468 களங்கனியைக்கைக்கொடுத்தாலுங்காழில்கனியெனவே
யுளங்கனிந்துட்கொள்வனெண்ணுதலாய்கன்றுறுகுணிலாய்
விளங்கனியைக்கொண்டகார்வடவேங்கடவெற்பன்விண்ணோர்
தளங்கனியத்தெள்ளமுதளித்தானகர்த்தாழ்குழலே. (10)

469 பொன்காதலித்தவடமலையானைப்புகழ்ந்ததமிழ்
நன்காரிமாறன்பொதியத்துள்ளாகநயந்தநம்மின்
மன்காதலெற்றற்றுமங்கைதன்காதலுமன்னனென்பான்
றன்காதலுந்தம்மினொன்றாய்த்தழைந்தது தாழ்குழலே. (11)

இல்வாழ்க்கை முற்றும்.

## ௨. பரத்தையிற்பிரிதல்.

௧௦௧. வாயில்வேண்டன்மறுத்தனேர்வித்த
னேயமதனொடுநேர்தலென்றுரவோ
ராய்ந்துரைபரத்தையினகற்சிநால்வகைத்தே. (௫)

[௧. உணர்த்தவுணரு மூடற்குரியவை.]

௧௦௨. காந்தன்பரத்தையிற்பிரிந்துழிக்கண்டோ
ரேந்திழையூடற்கேதுவிஃதென்றலும்
புலம்பறவிருந்தவள்புலம்பிரங்கலு
மிலங்கிழைப்பாங்கியீதென்னெனவினாதலு
மண்ணல்புறத்தொழுக்கொண்ணுதலுணர்த்தலும்
பண்ணமர்மொழிச்சியைப்பாங்கிகழறலுந்
திருந்திழைசெவ்வணியணிந்துசேடியைவிட
வருந்தமருமனையர்கண்டழுங்கிக்கூறலும்
பண்பிகழ்பரத்தையர்கண்டுபழித்தலு
நண்பனையுலகியனாடிவிடுத்தபின்
மன்னவன்வரவினைவாயிலோர்மொழிதலு
மென்னகைக்கதனையிகுளைவிளம்பலு
மிணர்ப்புரிகுழலாளெதிர்கொண்டுபணிதலும்
புணர்ச்சியின்மகிழ்வுமென்றுணர்த்துபன்னொன்று
முணர்த்தவுணருமூடற்குரிய. (௬)

காந்தன் பரத்தையிற் பிரிந்துழிக் கண்டோ
ரேந்திழையூடற் கேதுவிஃ தென்றல்.

470 பாடற்புலவர்பிரான்மகிழ்மாறன்பராங்குசன்பொன்
மாடத்திருக்குருகூர்மணிவீதியின்மன்னன்பைந்தா
ராடற்பரத்தையர்சூழ்ந்துகொண்டாடியணிந்தனரா
லூடற்குரித்திதுகற்புடையாட்டியுணர்ந்திடினே. (12)

புலம்பறவிருந்தவள் புலம்பியிரங்கல்.

471 மழவைக்கரியென்றபேர்மாற்றவேமலர்த்தாளைவிண்ணோர்
தொழவைத்தமால்வண்டுவராபதியன்பர்சூளையர்பால்
விழவைப்பயின்றுபைந்தார்தடுமோதும்வினோதமென்னை
யழவைத்துமற்றவற்றையெவ்வாறுளத்தாற்றுவனே. (13)

இலங்கிழைப்பாங்கி யிஃதேன்னென வினாதல்.

472 முருகாரிலஞ்சித்தொடைப்புயத்தான்முத்தர்வேண்டுமுத்தி
தருகாரிமாறன்குருகாபுரிநண்பர்தண்ணளிகூர்ந்
தொருகாலமுநிற்பிரியாதிருப்பவுபயகண்ணீ
ரிருகாவிரியிற்பரந்ததிங்கேதுரையேந்திழையே. (14)

அண்ணல்புறத்தொழுக் கொண்ணுத லுணர்த்தல்.

473 தேசிகர்போற்றும்பிரான்சீபராங்குசன்றென்குருகூர்த்
தாசியர்வீதியினேர்படவேதலைமேற்புனைந்த
வாசிகைசூட்டினனாந்தடத்தாமரைவண்டுசெந்தேன்
மூசியகாவியில்வீழ்புனலூரண்ணன்மொய்குழலே. (15)

தலைமகளைப் பாங்கி கழறல்.

474 வாதுசெய்வாதியர்கட்கிடியேறென்னுமாறனைவர்
தூதுசெய்வானைத்துதிப்பவனாட்டன்பர்சூளையர்பா
லேதுசெய்தாலுநம்மில்வாழ்க்கைபேணியிருப்பதல்லாற்
பேதுசெய்தாயணங்கேயினிநீசெய்யும்பெற்றியன்றே. (16)

திருந்திழை செவ்வணி யணிந்து சேடியைவிட
வருந்தம ருழையர்கண் டழுங்கிக் கூறல்.

475 பொற்பழியாதபொனங்கொடிபூத்தபொலிவுரைக்கி
லிற்பழியாமெனச்செவ்வணிகாட்டுமித்தூதுமந்தோ
கற்பழியாததிருமால்கடன்மல்லைக்காரிகைக்கோர்
சொற்பழியாமினியென்னாமிதற்கிங்குச்சொல்வதுவே. (17)

பரத்தையர் செவ்வணிகண்டு பழித்தல்.

476 வெங்கயமூலமென்பார்திருவாறன்விளையுட்கற்பின்
மங்கையையேதென்றுவாழ்த்துவம்யாமலர்க்காவியையும்
பங்கயமாமென்பதனைமெய்யாக்கிப்படியெடுப்பாய்ச்
செங்கையம்போருகத்தேரார்கொம்பர்மீதுசெறித்ததற்கே. (18)

மன்னவன் வரவினை வாயிலோர் மொழிதல்.

477 அலகிலவாஞ்சுடர்ஞானப்பிரானடியார்க்கின்பம்
விலகியகாரிடவெந்தைபன்னாள்கற்பின்மென்மைகுன்றா

திலகியசெவ்வணிகண்டாலுஞ்சேடியுடனெழுந்திங்
குலகியல்பேணிவந்தான்புனலூரனுளமகிழ்ந்தே. (19)

பாங்கி தலைவிக்குத் தலைவன்வரவினையுணர்த்தி வாயினேர்வித்தல்.

478 மறுத்தானுருதபுகழ்மாறன்வாதியர்வாய்மதத்தை
வெறுத்தான்வழுதிநன்னாட்டன்பர்தாம்விலைமாதரில்லத்
திறுத்தாரெனும்பழிதொல்லாப்புறங்கடையெய்திநின்றாற்
பொறுத்தாறுவதல்லவோதிருவேநின்பொறையென்பதே. (20)

இணர்ப்புரிகுழலாளெதிர்கொண்டு பணிதல்.

479 தணந்தாலவர்பின்றொடர்ந்தெழுவாய்தணந்தாரெமதின்
மணந்தாலும்வாயின்மறுக்கப்பொறாய்மனனேமறைநா
லுணர்ந்தார்புகழ்திருமாலுறையூரன்பருள்ளத்தொன்றாய்ப்
புணர்ந்தாயெனக்குமஃதேயுணர்விற்புணர்ந்ததுவே. (21)

புணர்ச்சியின்மகிழ்தல்.

480 கைந்நாகமூலமென்றோதியநாட்சென்றகண்ணன்வண்ணப்
பைந்நாகமெல்லணையான்பதம்போற்றும்பராங்குசனாட்
டிந்நாளெமக்கெய்தும்பேரின்பமானதிருவினையெய்தா
மூர்நாளவற்றுள்ளுமுன்னாளதேய்க்குமுகிழ்நகையே. (22)

[உணர்த்தவுணரு மூடல் பதினொன்றும் முற்றும்.]

[உ. உணர்த்த வுணரா வூடற்குரியவை.]

க0அ. மென்னகைவெள்ளணியணிந்துவிடுத்தழி
மன்னவன்வந்துவாயில்வேண்டலு
மைந்தனையீன்றுமடந்தைநெய்யாடலைத்
தந்திரப்பாங்கிதலைவற்குணர்த்தலு
மூரவோன்றன்மனத்துவகைகூறலுமவன்
வரவுணர்ந்திருளைவாணுதற்குணர்த்தலுந்
தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தலும்
பாண்மகன்முதலாப்பாங்கனிரு
யாண்மகன்விடுத்தவாயிலவண்மறுத்தலும்
பாணன்வரவினைப்பாங்கிபழித்தலும்
பாண்மகனவ்வுழிப்பணிந்துவெறுத்தலும்

புதுவிருந்தொடும்வரப்பொறுத்தல்கண்டிறைமகன்
மதிபெறவியந்துவாழ்த்துபுமகிழ்தலுங்
களித்தவன்விருந்தொடுங்கடிமனையகத்துற
வொளித்தவூடல்வெளிப்படுகாலை
மின்னிடையமளியில்வென்னிடமெலிதலும்
பொன்னடிபணிந்தவன்பொறுத்தியென்றேத்தலு
மெங்கையர்காணினன்றன்றஃதென்றலி
னங்கவன்பிறர்தமையறியேனென்றலுங்
காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தலு
மேமுறப்பாங்கியிறைவியைத்தணித்தலுந்
தணியாளாகத்தலைமகனூடலு
மன்பனைப்பாங்கியன்பிலைகொடியையென்
றின்புறக்கூறலுமின்னனபிறவு
முணர்த்தவுணராவூடற்குரிய. (எ)

மென்னகை வேள்ளணி யணிந்து விடுத்துழி
மன்னவன் வந்து வாயில் வேண்டல்.

481 தலைமையுள்ளாமென்றலைமையுள்ளாதுதவறையுள்ளா
விலைமையுள்ளாரிற்கடைநின்றதாற்சதுவேதங்கற்ற
நிலைமையுள்ளார்தொழுமானின்றவூர்மின்னேரீதிருத்திக்
கொலைமையுள்ளாதின்னருள்புரிவானருள்கோகிலமே. (23)

மைந்தனையீன்று மடந்தை நெய்யாடலைத்
தந்திரப் பாங்கி தலைவற் குணர்த்தல்.

482 துளவலர்தாமப்புயத்தானடிதொழுந்தொண்டருள்ளத்
தளவளவாநண்புறுநெடுமாயனனந்தபுரத்
திளவரசைப்பயந்தின்பமுழ்ங்நீர்புக்கிறைவபின்னுந்
தளவலர்வாசக்குழலிநெய்யாடினள்சால்புறவே. (24)

உரவோன் றன்மனத் துவகை கூறல்.

483 வேதக்குழவியைத்தந்தருணதவிநோதன்கஞ்சப்
பாதக்குழகன்றருங்கையன்ஞள்பவளக்கனிவாய்க்
காதற்குழவியையோபயந்தாண்மூத்திகாட்டுமுண்மைப்
போதக்குழவியயன்றோபயந்தனள்பூங்கொடியே. (25)

8A/6-50

வரவுணர்ந் திகுளை வாணுதற் குணர்த்தல்.

484 நிறையுயிர்க்காவலெனுநெடுமாயன்மெய்ஞ்ஞானமுந்நூன்
மறையுயிர்த்தான்கடன்மல்லையில்வாழ்நம்மனையுண்மைந்தற்
பொறையுயிர்த்தாலித்துநெய்யாடல்கேட்டுள்புகுந்தனன்பூ
நறையுயிர்க்குந்தண்ணறுந்தாமவேலண்ணனன்னுதலே. (26)

தலைவியுணர்ந்து தலைவனோடு புலத்தல்.

485 தாமத்துளபத்திருமார்பன்சாளைக்கிராமத்தெங்கள்
சேமத்துணைவமழலைச்செவ்வாய்த்தெள்ளமுதளிக்கு
மேமப்புதல்வனைக்கைக்கொள்வதாலிங்கெவன்பயனன்
காமப்புதல்வனையெங்கையர்பாற்சென்றுகைக்கொள்கவே. (27)

பாண்மகன் முதலாப் பாங்க னீறு
யாண்மகன் விடுத்த வாயிலவண் மறுத்தல்.

486 யாணர்க்குருகைப்பிரான்மகிழ்மாறனையேத்தலர்போ
லூணற்றிருகைச்சுரையோடுடன்புனலூரன்பின்போய்
நாணற்றவெங்கையர்பாலிச்சைபாடிநடித்துணவுண்
பாணப்பயலிங்குவந்ததென்னோவின்பப்பைந்தொடியே. (28)

பாணன்வரவுணர்த்திப் பாங்கி பழித்தல்

487 கொங்கலங்காரமகிழலங்காரன்குருகையுள்ளார்க்
கிங்கலங்காரப்புதல்வனுண்டாயபின்னெங்கையர்பாற்
றங்கலங்காரமுணராதுகண்படைதானுணர்த்து
மங்கலம்பாடவணங்கேமதங்கனும்வந்தனனே. (29)

பாண்மகனவ்வுழிப் பணிந்து வேறுத்தல்.

488 மாற்றம்புரியும்பரவாதியரைமதமடக்கு
மேற்றம்பயில்வண்டமிழ்ச்சடகோபனிணையடியே
போற்றன்புடைப்புனலூரன்குற்றேவலிற்போந்தவென்மேற்
சீற்றந்தணிதிருவேநினக்கேற்பனசெய்தருளே. (30)

புதுவிருந்தோடும்வரப் பொறுத்தல்கண்டிறைமகன்
மதிபெற மகிழ்தல்.

489 பெருந்தாரணியுளிருந்தார்பிறவிப்பிணிதனக்கோர்
மருந்தாந்திருக்குருகூர்மகிழ்மாறனைவாழ்த்துமன்பர்

விருந்தாகிவைகலுமென்பான்மருவுகமேதகுசீர்
தருந்தாழ்குழலிடத்துண்டாம்புலவிதவிர்வதற்கே. (31)

களித்தவன் விருந்தோடுங் கடிமனை யகத்துற
வொளித்த வூடல் வெளிப்படு காலை
மின்னிடை யமளியில் வென்னிட மெலிதல்.

490 பொருப்பாதியசூழன்மத்தாதியவென்பபுட்குழியான்
திருப்பாற்கடல்கடைநாளந்தகாரஞ்செயும்விடத்தால்
விருப்பாமுதும்பின்னிட்டதொன்றுமின்பமெல்லியல்பாற்
பெருப்பான்குழன்முன்னிடவிதழாதியபின்னிட்டதே. (32)

491 கண்ணகன்ஞாலம்புகழ்நெடுமாயன்கடிநகரிப்
பெண்ணரசாண்மைபெருகநன்றேபங்குபேதமதாய்த்
தண்ணளிதானின்றிச்சொற்காதிபோகந்தன்பாலுமென்பான்
மண்ணவர்தூற்றுமராட்டமதாகியவண்மைகொண்டே. (33)

பொன்னடிபணிந்தவன் பொறுத்தியென்றேத்தல்.

492 துளித்தார்திரைத்திருப்பாலாழியீன்றசுராமுதம்
புளித்தாலதற்குமருந்துளதோதொண்டுபூண்டவர்பாற்
களித்தார்திருக்கடித்தானத்துள்ளாய்நின்கருத்தினைநீ
தெளித்தாறுவதன்றியாரேபுலவிதெளிப்பவரே. (34)

எங்கையர் காணினன் றன்றிஃ தென்றல்.

493 தன்றுணைத்தாளைத்தொழுவார்க்குச்செம்பொனந்தாமத்துள்ளான்
வன்றுணைத்தாளருள்வண்குருகூரனைவாழ்த்துமன்னு
வென்றுணைத்தாளைவருடலும்வேண்டலுமெங்கையர்க்குச்
சென்றுரைப்பாருண்டறிந்தாற்பழுதிங்குத்தீண்டலையே. (35)

அங்கவன் பிறர்தமை யறியேனென்றல்.

494 அருட்பான்மைமாறன்றிருவாய்மொழியென்றருளிச்செய்த
பொருட்பான்மைதோய்ந்ததுணைச்செவியாற்புன்புலவர்சொன்ன
மருட்பான்மைநூலையுங்கேட்பதுண்டோமுல்லைமாலிகைசூ
ழிருட்பான்மைவார்குழலாயென்னபான்மையியம்புவதே. (36)

காமக்கிழத்தியைக்கண்டமை பகர்தல்.

495 வெங்கட்கரிசொன்னமால்வீரைமாநகர்வீதியிலுங்
சிங்கக்குழவிதனையிறைவாவொருசேயிழைதன்
னங்கைத்தலத்தெடுத்தாளன்னையானென்றனளவள்யார்
நங்கைத்துணைமையென்றேனைக்கண்டேகினளுணினளே. (37)

பாங்கி தலைவியைப் புலவிதணித்தல்.

496 தலைநாண்மதியமிருக்கமுன்னட்பின்னைசாந்தளித்தாண்
முலைநாதன்றோய்ந்தும்புணர்ந்திலளோசங்கமுத்தமிழ்தேர்
கலைநாவலர்புகழ்நாவீறன்செல்வக்கவின்குருகூர்
விலைமாரியர்ப்புணர்ந்தானென்றுநீயென்வெறுக்கின்றதே. (38)

தலைவி புலவிதணியாளாகத் தலைமகனூடல்.

497 செஞ்சேலனையகண்டென்னரங்கேசன்சிலம்பிற்கண்ட
மஞ்சேய்குழலிமலர்க்கண்களேன்மருட்பார்வையதாய்
நஞ்சேபுரிவதென்னெஞ்சேயிவளுமங்நங்கையென்று
லஞ்சேலெனக்கண்டிலன்பின்னைநீயென்னயர்கின்றதே. (39)

பாங்கி தலைமகனை யன்பிலை கொடியை யென்றல்.

498 புனையப்படுமணியெல்லாமுறுப்பின்பொலிவழிக்கும்
வனையப்பெறிலென்றுவாழ்த்துமன்னுமன்னர்மல்லிநன்னாட்
டுனையிற்புறம்விட்டுநீங்காமருந்தையுவர்த்தனையால்
வினையிப்படிசெய்ததற்கினியாரைவெறுப்பதுவே. (40)

[உணர்த்த வுணரா வூடற்குரியவை முற்றும்.

[ரு. உணர்வதோடுணரா வூடல்கட்குரியவை.]

௪0௬. அரிவைமைந்தனுமாற்றுமையுமே
வாயிலாகவரவெதிர்கோடலும்
புணர்ந்தவன்போயபின்புனையிழையிருளையோ
டணங்குதன்மைந்தனையன்புறப்புகழ்தலுந்
துணைவனைப்புகழ்தலுந்தாயைப்பாங்கி
துணைவியைப்புகழ்ந்துசொல்லலுமதன்பின்
மதுப்பொழிதாரோன்மணமனைவாயிற்

பொதுத்தலத்திருந்துழிப்புரைதீர்மனைவியர்
நினைவறிகண்புதைநிகழ்தலும்பிறவு
முணர்வதோடுணராவூடல்களுட்கொளும். (அ)

## மைந்தனும் ஆற்றாமையும் வாயிலாகத் தலைமகன்வந்துழித் தலைமக ளெதிர்கோடல்.

499 அம்பருமான்மதச்சேறுநின்றாடுமணிமுலைக்கித்
தம்பரும்பூசத்தலைச்செய்ததாய்பொதுத்தம்பர்விண்மே
லும்பரும்போற்றுந்திருநெடுமாயனுறையுறையூ
ரிம்பர்நின்றெங்கையர்காணாதெவ்வாறுனக்கீந்தனனே. (41)

500 என்பேரைமாற்றியெனக்கையனேயெங்கையென்னுமங்கை
தன்பேரைநென்னலிற்றந்தகன்றார்சங்கவண்டமிழ்தேர்
தென்பேரைச்செங்கனிவாயர்வந்தான்மூத்தஞ்சென்றளிக்கி
னின்பேரையிப்பிரம்பின்பேரதாக்குவனிச்சயமே. (42)

## தலைமகன் புணர்ந்துநீங்கியபின்னர்வந்த பாங்கியுடன் (தலைமகள்) புதல்வனைப்புகழ்தல்.

501 காரேயனையதிருமேனியான்றிருக்காரகத்தார்
தேரேகடாய்நம்புறங்கடைவாய்நிற்பச்செய்வித்ததால்
வாரேய்வனமுலையாய்சலராசிவளைத்தமண்மே
லாரேபுதல்வற்பயந்தெமைப்போலின்பமெய்தினரே. (43)

## தலைமகனைத் தலைமகள் புகழ்தல்.

502 நாண்மடமச்சம்பயிர்ப்பென்னுநான்குநலனுமென்பாற்
பூண்மனைவாழ்க்கைபுரந்தனனாற்கொடும்பொன்னன்முன்போர்
தூண்மகனாநெடுமால்சிங்கவேள்குன்றிற்றோன்றியபே
ராண்மகனாமன்பன்குன்றாக்கடைப்பிடியாண்மையனே. (44)

## தூங்கைப் பாங்கி துணைவியைப் புகழ்தல்.

503 எவ்வழிவேண்டினர்காதலர்தாமஃதென்குறிப்பென்
றவ்வழிபூண்டனளாணிகர்யாளிகோடிசுற்றிச்
செவ்வழியாடுந்துழாய்மாலமார்க்குத்தெள்ளமுதத்
துவ்வழியாதருள்கார்துவராபதித்தூங்கைக்கே, (45)

மதுப்பொழி தாரோன் மணமனை வாயிற்
பொதுத்தலத் திருந்துழிப் புரைதீர் மனைவியர்
நினைவறி கண்புதை நிகழ்தல்.

504 சிந்தாமணிதமதாகப்பெற்றுர்புன்மைச்செல்வர்முன்போய்
நொந்தாகுலமுற்றிரப்பதுண்டேயன்பர்நோன்பெனவாழ்
கொந்தார்வகுளப்பிரான்குருகூர்ச்செம்பொற்கொம்பனையாய்
வந்தாதரவிற்புதைத்ததென்னீயென்மலர்க்கண்களே. (46)

பிறவுமென்றதனால், பரத்தையைத் தேரேற்றி நீராட்டிவந்து
வாயில்வேண்டிய தலைமகற்கு வாயில் மறுத்தற்கும்,
கற்புடைமனைவியைக் காமக்கிழத்தி
நற்குணமிலளென நகைத்துரையாடற்கும் செய்யுள் (வருமாறு:-)

505 சிற்பரத்தைத்தெரிசித்தநண்மாறன்றிருக்குருகூ
ரிற்பரத்தைக்கெளிமைப்பட்டயானெங்கையென்னுமொரு
கற்பரத்தைப்புட்பகத்தேற்றிநீர்குடைகள்வர்பொய்த்து
நிற்பரத்தைச்சொல்லவொட்டார்கள்வாயிலினிற்பவரே. (47)

506 வழுவாதபேரின்பவாரிபெற்றேமன்னர்மன்னனைப்போற்
கழுவாமணியையும்பெற்றெடுத்தாள்காரிமாறன்முந்நீ
ரெழுபார்புகழ்பெருமான்குருகூர்நங்கையெங்கையென்றென்
றழுவாளிவள்கற்பொடில்லறப்பானமைபறவுநன்றே. (48)

தலைமகனோடு தலைமகள் புணர்ந்த கலவிகருதிப் புலத்தல்.

(இதுவும் பிறவுமென்பவற்றின்பாற்படும்.)

507 குலவியவாசத்துளவப்பிரான்வண்குருகைபன்னு
ளிலவிதழ்ப்பானந்தலைதடுமாறியிருவரொன்றுங்
கலவியுணீசிம்புளகாந்தியத்திற்கலுழ்ந்துபின்னும்
புலவியுள்ளாமன்னனுராகம்யார்க்கும்பொதுவென்னவே. (49)

[உணர்வதோடுணராவூடல்கட்குரியவை முற்றும்.]

சoரு. முறைபெறச்சூத்திரமூன்றினுமுரைத்தவை
யறைதருபரத்தையின்கற்பின்விரியே. (க)

பரத்தையிற்பிரிவு முற்றும்.

---

## ரு—எ. காவன்முதலிய பிரிவின்வகை.

க0௬. போக்கறிவுறுத்தல்போக்குடன்படாமை
போக்குடன்படுத்தல்போக்குடன்படுதல்
போயுழிக்கலங்கல்வன்புறையேவன்பொறை
வரும்வழிக்கலங்கல்வந்துழிமகிழ்ச்சியென்
றொருதலையாகவுரைத்தவெண்வகைய
வருண்மலிகாவன்முதலியவைந்தே. (க0)

### ரு. காவற்பிரிவு

அவற்றுள், காவற்பிரிவு தலைமகனுணர்ந்த பாங்கி தலைமகட்குணர்த்தல்.

508 நாவற்குரியபெருந்தீவினுவலர்நாதனன்னச்
சேவற்பதாகைப்பிரான்மகிழ்மாறன்றிருக்குருகூ
ரேவற்குரிமைபுரிவேன்றடுப்பதிகழ்ந்துவையங்
காவற்குரிமைபுரிந்தேகினரன்பர்காரிகையே (50)

தலைவனுடுகாவற்குப்பிரிந்துழித் தலைமகள்கார்ப்பருவங்கண்டுவருந்தல்

509 கூர்காலவேல்விழியாய்குறளாயண்டகோளந்தொட்ட
தோர்காலதனினதிதந்தமாலுறையூரெங்க
ணீர்காலக்கார்மயில்பேடையையேவிட்டுநீங்கப்பெறுக்
கார்காலநீங்கினராறபிழைப்பாரெவர்கங்குலுக்கே. (51)

510 எக்காலமுமிடங்கண்டுபொன்மாரியிறைக்குமன்பர்
கைக்காரினைக்கண்டுதோற்றமைக்கார்தனிகண்டனையே
தக்கார்புகழ்தண்ணனறஞ்சையுள்ளாளவர்தண்ணளிக்குள்
புக்காளெனவெல்லவந்துள்ளாரப்புரவலரே. (52)

தலைவன்காவற்குப்பிரிந்துழிவருந்தியதலைமகளைப் பாங்கியாற்றுவித்தல்.

511 போர்வந்தபாண்டவர்செங்கோனடாத்தப்புணரிசுற்றும்
பார்வந்தளித்தருள்பாண்டவர் தூதனற்பாடகத்தாய்
கூர்வந்தவேலவர்மேனாட்பருவங்குறித்துரைத்த
கார்வந்ததன்றிதுதேர்வந்ததாகக்கருதுகவே. (53)

இதனுட் கல்விப்பிரிவை யொடுக்கத்திற் றுறவுசம்பந்தமாகக் கூறுதல் குறித்துக் கார்ப்பருவத்தையுங் காவற்பிரிவையும் முற்கூறினர்.

காவற்பிரிவு முற்றும்.

## ச. தூதிற்பிரிவு.

தலைமகன் றூதிற்பிரிந்தமை பாங்கி தலைமகட்குணர்த்தல்.

512 கடனறிந்தெய்து தற்கின்கிது காலமெனுங்கருத்தோ
டடனறிந்தெண்ணியுரைப்பதுற்றுரிகல்வேந்தர்மெய்த்தே
திடனறிந்தேவலிற்றூதுசென்றார்பத்தர்சிந்தையுள்ளாய்
நடனவின்றான்றிருநாகைநன்னாட்டன்பர்நன்னுதலே. (54)

தலைமகன் றூதிற்குப்பிரிந்துழித்
தலைமகள் கூதிர்ப்பருவங்கண்டு வருந்தல்.

513 வாதிக்குநூற்றுவர்மண்ணுளவைத்தவர்மண்புரப்பான்
சாதித்தமாயன்றமிழ்த்தஞ்சையார்தக்கதாய்த்துணர்த்துந்
தூதிற்ககன்றனராற்குன்றவாடைதுளிபரப்புங்
கூதிர்க்கொடும்பனிக்காற்றுவதார்மென்கொடியிடையே. (55)

(தலைமகன்) தூதிற்குப்பிரிந்துழிக் கூதிர்ப்பருவங்கண்டு வருந்திய
தலைமகளைத் தோழி யாற்றுவித்தல்.

514 மெய்ச்சானகியின்பமெய்தமுன்னாளின்மிதிலையுட்சென்
றச்சாபந்தன்னைவளைத்தருள்காரரங்கத்தணங்கே
கச்சார்துணைமுலைவெச்சானதின்றிக்கவலைசெய்யு
நச்சானகூதிர்கண்டாலமைவாரல்லர்நண்பருமே. (56)

தூதிற்பிரிவு முற்றும்.

## ரு. துணைவயிற்பிரிவு.

தலைவன் றுணைவயிற்பிரிவலெனப் பாங்கிக் குணர்த்தல்.

515 கோடாச்செங்கோலவர்நற்றுணையாய்க்கொடுங்கோன்மைசெய்து
நாடாளுநூற்றுவர்போரைவென்றானறையூரனைப்போற்
றேடார்மலர்க்குழலாய்துணைவேந்தர்துணையெனப்போ
யோடாததெவ்வர்ப்புறங்கண்டுமீள்வதற்கூற்றனனே. (57)

துணைவயிற்பிரிவேனென்ற தலைமகனைப் பாங்கி செலவு விலக்கல்.

516 வன்பனிக்காகியகார்முகத்தோனென்பன்வாடைவெந்தீ
யென்பனிக்காசினியோர்புகழ்மாயனிடவெந்தையாய்
முன்பனிக்காலத்துநீமுயங்காதெழின்மொய்குழலாள்
பின்பனிக்காசமென்பன்மற்றியாதொன்றுபேசலனே. (58)

தலைமகன் றுணைவயிற்பிரிந்தமை
தோழி தலைமகட்குணர்த்தல்.

517 பணையார்மராமரமேழையும்பார்த்துப்பணைத்தெழுமோர்
கணையாலுருவச்சிலைகுனித்தான்பிற்காமரதப்
புணையாகியசெம்பொற்பூங்கொடியேநின்புளகமுலைத்
துணையானவர்பிறர்க்குத்துணையாகத்துறந்தனரே. (59)

முன்பனிக்காலத்(துத்) துணைவயிற்பிரிந்த தலைமகன்
வினைமுற்றா திளவேனிற்காலத்தும்வாராமையிற்
றலைமகள் இளவேனிற்பருவங்கண்டு
வருந்தல்.

518 அளவேனில்வாழ்க்கையைமேலுமென்னுமென்றமர்விளைக்குங்
களவேனிலான்வருங்காலமென்றோர்ந்துங்கடம்பமர்வேள்
வளவேனிலாயவிழிமடவாய்மன்னர்மல்லிநன்னாட்
டிளவேனிலாகியும்வந்திலராவிதற்கென்சொல்வதே. (60)

வினைமுடியாது நீட்டித்துமுடிந்தழித்
தலைமகளுருவுவெளிப்பாடுகண்டு
தலைமகன் கூறல்.

519 மல்லார்திரள்புயத்தேர்வலவாமகிழ்மாறனின்செவ
னல்லார்பாவும்வழுதிநன்னாடனைநாடலர்போற்
புல்லார்புறமிட்டபாசறைஞாஙகர்ப்புருவவிணை
வில்லார்துணைப்படையோடெதிர்ந்தாரெவர்வெல்பவரே. (61)

துணைவயிற் பிரிந்த தலைமகன் வினைமுற்றிமீண்டமை
தோழி தலைமகட் குணர்த்தல்.

520 மெய்ப்பாவலர்தம்பிரான்சடகோபன்மெய்வேதநுட்பந்
தப்பாதுசெந்தமிழ்வேதஞ்செய்பாவலன்றன்பொருனைத்
துப்பாரிலவிதழ்த்தூநகையாய்சொன்னவாய்மையொன்றும்
பொய்ப்பாரலரென்னவந்தார்துணைவயிற்போனவரே. (62)

துணைவயிற்பிரிவு முற்றும்.

## ௬. பொருள்வயிற்பிரிவு.

### தலைமகன் பொருள்வயிற்பிரிந்தமை பாங்கி தலைமகட்குணர்த்தல்.

521 என்னேயுனக்கினி[1]யான்சொல்லுமாறியற்பாவலவன்
பின்னேநடந்தவெஃகாவுளெம்மான்பதம்பேணலர்போற்
கொன்னேகொடுஞ்சுரஞ்சென்றனர்காண்கொடித்தேரினெடும்
பொன்னேபொருளென்றுபொன்னேநமதுபுரவலரே. (63)

### தலைமகன் பொருள்வயிற்பிரிந்துழித் தலைமகள் பின்பனிப்பருவங்கண்டு வருந்தல்.

522 காருலவுங்குழலாயளிமூசுங்கமழ்வகுளத்
தாருலவும்புயத்தான்சடகோபன்றமிழ்க்குருகூர்ப்
போருலவுஞ்சுடர்வேலவர்தாஞ்செம்பொருட்ககன்றுற்
பேருலகத்திற்றனித்திருப்பாரெவர்பின்பனிக்கே. (64)

### தலைமகன் பொருள்வயிற்பிரிந்துழிப் பின்பனிப்பருவங்கண்டு வருந்திக்கூறிய தலைமகளைத் தோழி யாற்றுவித்தல்.

523 தாதேய்வகுளப்பிரான்சடகோபன்றமிழ்க்குருகூர்
மாதேயுனையொருபோதகலாதினிவைகலுந்தா
மாதேயந்தன்னொடுமாதாரம்போலில்லறம்வளர்க்கு
மீதேபொருளென்றுசெம்பொருளோடன்பரெய்தினரே. (65)

பொருள்வயிற்பிரிவு முற்றும்.

## ௭. ஓதற்பிரிவு

### தலைமகன் கல்விக்குப்பிரிந்தமை பாங்கி தலைமகட் குணர்த்தல்.

524 விரிந்தாழ்கடற்புவனத்தொருநாலெனும்வேதநுட்பந்
தெரிந்தார்தெரிந்ததிறந்தெளிவான்விண்ணிற்றேவர்க்கன்பு
புரிந்தாரமுதருண்மால்புள்ளம்பூதங்குடியிலன்பர்
பிரிந்தார்கயலைப்பழித்தவைவேல்விழிப்பெய்வளையே. (66)

---

[1] யென்சொல்லுமாறு—பிரதிபேதம்.

தலைமகன் கல்விக்குப்பிரிந்துழித்
தலைமகள் வேனிற்பருவங்கண்டு வருந்தல்.

525 வானிற்பரந்தபுகழ்மாறன்வண்டமிழ்வாய்மையொடுந்
தேனிற்சிறந்தமென்றீந்தொடையாழிசைச்செல்வங்கற்பார்
நானிற்செறிந்தின்பமெய்துவதாயென்றுநல்குவரிவ்
வேனிற்பருவந்தனைவெல்வதாரினிமெல்லியலே. (67)

கல்விக்குப்பிரிந்ததலைமகன் இளவேனிற்காலத்
தில்லின்கண் மேவினமை பாங்கிகூறித் தலைமகளை யாற்றுவித்தல்.

526 எண்ணாறெனத்தருநல்யாண்டிளமையையெய்திவிண்மேல்
விண்ணாடுறநின்னொடுந்துறப்பானெண்ணிமெல்லியலாய்
தண்ணார்வகுளப்பிரான்குருகூரன்பர்தாநமதிற்
கண்ணார்வமுற்றெய்தினர்கண்டுவாழ்ககளிதகவே. (68)

ஓதற்பிரிவு முற்றும்.

ஏழுறுமறுநான் கிரட்டிகழிந்தபின்
காமருதுறவிற் காதலன்படர்தல்.

527 நல்லறத்தாற்பெறுதற்கரிதாய்ப்பெற்றநாயகமிவ்
இல்லறத்தாறெய்திவாழ்ந்திருப்பானணங்கேயினிநாந்
தொல்லறத்தாற்றமிழ்தேர்மாறனைத்துதித்தேதொடர்ப்பால்
வெல்லறத்தாரொடொன்றும்பெருவாழ்வெய்தவேண்டுதுமே. ()

இது, காமஞ்சான்றகடைக்கோட்காலை
யேமஞ்சான்றமக்களொடுதுவன்றி
யறம்புரிசுற்றமொடுகிழவனுங்கிழத்தியுஞ்
சிறந்ததுபயிற்றலிறந்ததன்பயனே.

என்னுங் கற்பியற்சூத்திரத்தான் வானப்பிரத்தத்தின்கட் பிரிவின்றுங்
கூறியது.

கற்பியன் முற்றும்.

மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் முற்றும்.

---

ஸ்ரீ:

# மாறனகப்பொருட் சூத்திரமுதற்குறிப்பகராதி.

[எண்—பக்க எண்.]

# திருப்பதிக்கோவைச் செய்யுண்முதற்குறிப்பகராதி.

[எண்—பக்க எண்]

ஸ்ரீ:

# விஷயசூசிகை.

[ஆங்கில எண்கள் பாடலைக் குறிப்பன.]

## திருப்பதிகள்.

## நாடுகள்.



## நகரங்கள்.



## அரசர்கள்.

...வகத்தில் ... ங்கள.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் | 4 | 0 | 0 |
| *7. | தோத்திரத்திரட்டு | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) | 1 | 12 | [illegible] |
| 11. | திருவருணைக்கலம்பகம் | 0 | 6 | [illegible] |
| 12. | அழகாம்பிகைபிள்ளைத்தமிழ் | 0 | 8 | [illegible] |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா | 0 | 5 | [illegible] |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி | 1 | 4 | [illegible] |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை | 0 | 4 | 0 |
| * | சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் | 0 | 3 | 0 |
| 2. | கணநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) | | | |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் | 0 | 2 | 0 |
| 12.* | பன்னிருபாட்டியல் | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) | 0 | 8 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா | | | |
| 24. | குருமொழிவினாவிடை | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை | 0 | 8 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28.* | சந்[illegible]ாலோகம் | | | |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் | 1 | 0 | 0 |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திர நூறுபாட்டுக்குரை | | | |
| 36. | உவமானசங்கிரகம் | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | 1 | 0 | 0 |
| 0. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் | 0 | 8 | 0 |
| 1. | பொருட்டொகைநிகண்டு | 0 | 6 | 0 |
| | அகராதிநிகண்டு | 0 | 12 | 0 |
| . | மேகவிடுதூது | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் | 0 | 4 | 0 |
| 51.* | மதங்கசூளாமணி | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் | 0 | 10 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி— இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.

